உ

சிவமயம்.

சிவபெருமான் உமாதேவியாருக்கு உபதேசித்தருளிய

# தேவிகாலோத்தர ஆகமம்

## தமிழ் மூலமும்,

இதற்குத் தேவகோட்டை சிவாகம சங்கத்துச்
சித்தாந்த சாத்திர போதகர்
தூத்துக்குடி
பொ. முத்தைய பிள்ளை இயற்றிய

## சித்தாந்த ரத்ந மென்னும் விருத்தியுரையும்.

இவை
ஷை பொ. முத்தைய பிள்ளையால்,
பலவான்குடி
"சிவநேசன்" அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப் பெற்றன.

யுவஹூ ஆடிமீ
1935

விலை அணா 10.

# முகவுரை.

அரியயாக்கையின் மானுட யாக்கையே யாக்கை
விரியுநோன்பினில் உயிர்க்கொலா விரதமே விரதங்
கருதிற்றெய்வதங் கண்ணுதற் றெய்வமே தெய்வம்
தெரியிற்றேவிகா லோத்தா தேற்றமே தேற்றம். —வள்ளலார்.

பெறுதற்கரிய மானிடப் பிறவியைப் பெற்ற உயிர்களுள், "மானிடப் பிறவிதானும் வகுத்தது மனவாக்காயம் - ஆனிடத்தைந்துமாடும் அரன் பணிக்காக" என்பதை உணர்ந்து சிவபெருமான் றிருவடியை அடைதற்கு முயலும் உயிர்கள் மிகச் சிலவேயாம். அவ் வுயிர்கள் மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரமென்னும் நான்கு வகையான பக்குவங்களைப் பெற்று, சரியை கிரியை யோகம் ஞானமென்னும் நான்கு விதமான முயற்சிகளை முறையே செய்து, சாலோகமாதி பதமுத்திகளையும் சாயுச்சியமாகிய பரமுத்தியினையும் பெறும். இந்த இரண்டுவித முத்திகளுள் பரமுத்தியே சிறந்தது. இதுவே பிறவாமையை உடையது. இதனைப் பெறுதற்குரிய தீவிரதரபக்குவர்கள் செயலைக்கூறுவது தேவிகா லோத்தர மென்னும் ஆகமம். இவ் வாகமம் சிவாகமங்களின் சாரமாயுள்ளது.

இந்நூற்பெயர் தேவி, காலம், உத்தரமென்னும் மூன்று மொழிகள் சேர்ந்த தொடர் மொழியால் ஆக்கப்பெற்றுள்ளது. காலம் உத்தரமென்பது வடமொழிவிதிப்படி காலோத்தர மென்றாயிற்று. காலமென்பது உயிர்களுடைய தீவிரதரபக்குவ காலத்தையும், உத்தரமென்பது முடிவாகக் கூறப்படும் சித்தாந்தத்தையும் குறித்து, உமாதேவியாருக்கு உயிர்களுடைய மேலானபக்குவ காலத்தில் உபதேசிக்கத்தக்க சித்தாந்தப் பொருளைச் சிவபெருமான் உபதேசித்தகாரணம்பற்றி வந்தபெயர் தேவிகா லோத்தரமென்பது.

"வானவர் தலைவா இந்த மன்னுயிர் முத்தியெய்த - ஞானவாசாரஞானம் அருளினு லருளென்றேத்தி - தேனமர் குழலாள் தேவன் திருந்தடிபணிந்து சொன்னாள்" என்னு முதற்செய்யுளாலும், "உத்தமகுணத்தாய் ஞான ஒழுங்கெனு மிரண்டினாலே - மெய்த்தவர் முத்தியெய்தும் விதியினை வகுத்துரைப்பன்." என்னுமிரண்டாவது செய்யுளாலும் நூற்பெயர்க்குக் கூறப்பட்ட காரணம் பொருந்துமாறு காண்க.

இந்நூல் ஞானம் ஞானசாரமென்னும் இரண்டுபிரிவுகளையுடையது. ஞானஇயலில் ஞானத்தை அநுட்டிக்தற்குரிய அதிகாரி இலக்கணம், அதிகாரியின் பெருமை, முத்திநெறி, சீவன்முத்தி, சீவன்முத்தர் இயல்பு முதலியனவும், ஞானசார இயலில் ஞானசாதகன் சிவஞானத்தைத் தவிரஏனையவற்றைப் பயிலுதல் கூடாதென்பதும் கூறப்படுகின்றன.

இந்நூல் வடமொழியில் எண்பத்தைந்து சுலோகங்களுடனும் விருத்தியுடனும் உள்ளது. அதனை யாழ்ப்பாணம் சைவப்பிரகா வித்யாசாலை அதிபர் ஸ்ரீமத் த. கைலாசபிள்ளையவர்கள் அச்சிட்டு உதவியிருக்கின்றார்கள். தமிழில்மொழி பெயர்த்துச் செய்யுளாக பாடியவர் பெயர் முதலியன தெரியவில்லை. பொருள்கள் வடமொழி யோடு ஒத்திருக்கின்றன.

விநாயகர் வணக்கமாகக் கூறப்பட்ட காப்புச்செய்யுள், சருவ ஞானோத்தரம் தமிழ்மொழி பெயர்ப்புக்குக் கூறப்பட்ட காப்புச் செய்யுளோடு ஒத்திருக்கின்றமையால், இரண்டுநூல்கட்கும் மொழி பெயர்ப்பாசிரியர் ஒருவரே என எண்ணுதல்தகும். இந்தத்தமிழ் தேவிகா லோத்தரத்துக்கு ஓர் உரையுமுள்ளது. மூலமும் உரையும் அச்சாகி யிருக்கின்றன. உரைநடைமாயாவாத சம்பந்தமுடைய தாய் இருக்கிறது. சருவஞானோத்தரம் தமிழ்மூலத்தை மாயாவாதி ஒருவர் அச்சிட்டுத் தம்முடைய பக்கத்தையே சருவஞானோத்தரம் கூறுகின்றமையால் சைவாகமங்களின் முடிபுமாயாவாதமே என்று கூறத்தொடங்கினர். மாதவச்சிவஞானசுவாமிகள் சருவாகமங்களின் முடிபு சர்வ ஞானோத்தர மென்று சிவஞானபாடியத்தில் மிகப் பாராட்டியுள்ளார்கள். அவர்கள் அருள்மொழியை ஆதாரமாகக் கொண்டு சருவஞானோத்தரத்திற்கு சைவசித்தாந்தபரமாக முத்து ரத்நவிருத்தி என்னும் ஓர் உரைஎழுதி அச்சிட்டேன். அதனைக் கண்ணுற்ற பெரியாரிற்சிலர், தேவிகா லோத்தரத்திற்கும் சைவசித் தாந்த பரமாக ஓர் உரைஎழுதி வெளியிடவேண்டுமென்று விரும் பினர். அவர்கள் விருப்பத்திற்கிணங்கி சித்தாந்த ரத்நவிருத்தி என் னும் பெயருடன் ஓர் உரை என் சிற்றறிவுக் கெட்டியவாறு எழுதி முடித்தேன்.

இவ்வுரையில் ஒவ்வொரு செய்யுளுக்கும் அவதாரிகை, பதவுரை, பொழிப்புரை, கருத்துரை, விசேடவுரைகள் உள்ளன. உரையிற் காணப்படும் முக்கியமான பொருள்களுக்குப் பொருளகராதியும் சேர்க்கப் பட்டிருக்கின்றது.

மாதவச் சிவஞான சுவாமிகள் திருவடிகளைச் சிரமேற்கொண்டு இவ்வுரைஎழுதப் பட்டமையால், உரையில் காணப்படும் குணங்களைச் சிவஞானசுவாமிகளிடத்தும், குற்றங்காணப்படின் அதனை என் சிற்றறிவினிடத்தும் ஏற்றிக்குற்றத்தைப்பெரியோர்கள்பொறுப்பார்களாக.

இவ்வுரை எழுதி முடித்து நான்குவருடங்கட்கு மேலாகியும் அச்சிடப்படாத குறையிலிருந்தது. சிவநேசன் பத்திராதிபர் திருவாளர், ராம. கு. ராம. இராமசாமி செட்டியாரவர்கள் அக் குறையை நீக்கிச் சிவநேசன் பத்திரிகை வாயிலாக அச்சிட்டு உதவி னார்கள். இவ் வுதவிமிகவும் பாராட்டற்பாலது.

சிவாகமசங்கம்
தேவகோட்டை.

இங்ஙனம்,
பொ. முத்தைய பிள்ளை.

# பொருளகராதி.

# செய்யுள் முதற் குறிப்பு அகராதி.

## பிழையும் திருத்தமும்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 15 | மயகக | மயக்க |
| 18 | 5 | திருப்பவம் | திருப்பவன் |
| 21 | 15 | நிறன் | நின்ற |
| 38 | 21 | சீலம் ஆயஎன்பது அம் கெட்டு சீலாயஎனநின்றது | காலம் ஆதிஎன்பதும் சீலம்ஆயஎன்பதும் அம் கெட்டு காலாதி, சீலாய எனநின்றன. |
| 45 | 23 | நிற்றலின | நிற்றலின் |
| 64 | 7 | சீவன் முத்தன், | சீவன் முத்தன் |
| 82 | 17 | விட்ட | விடப்பட்ட |



சிவமயம்.

# தேவிகாலோத்தர ஆகமம்

## தமிழ் மூலமும்

## சித்தாந்த ரத்ந விருத்தி யென்னும்

## உரையும்.



## பாயிரம்.

### காப்பு

### விநாயகர் வணக்கம்.

முத்திவிநா யகன்மனத்தின் முரணறவே முடுகிநில
 முதல்வி ளக்கும்
அத்திவிநா யகனெனவந் தவித்தையொழித் துவித்தையளித்
 தறத்தை யாக்கும்
சத்திவிநா யகனுயர்ந்த தாணுவிநா யகன்றோற்றந்
 தருமோ ரட்ட
சித்திவிநா யகன்மதுரைச் சித்திவிநா யகனிருதாள்
 சிரத்தில் வைப்பாம்.

(இதன் பதப்பொருள்.) முத்திவிநாய் - முத்தியின் உண்மையை யறிய விரும்பி வினவுகின்ற, அகல் மனத்தின் - நூற்பொருள்களில் விரிந்தமனத்தின்கண், முரண் அற - மாறுபாடு அறுதற்பொருட்டு, நிலம்முதல் விளக்கும் - (இருளையோட்டி ஒளியைச்செய்து) நிலமுதலிய பொருள்களை விளக்குகின்ற, அதிவி நாயகன் என - அந்தப்பகலுக்கு நாயகனானசூரியன்போல, முடுகிவந்து - விரைந்து தோன்றி, அவித்தை ஒழித்து - அஞ்ஞானத்தைக்கெடுத்து, வித்தை யளித்து - ஞானத்தை விளங்கச்செய்து, அறத்தை யாக்கும் - (சிவனோடு பிரிப்பின்றி நிற்றலையுணர்தலாகிய) சிவபுண்ணியத்தைத் தோன்றச்செய்யுங் காரணத்தால், சத்தி விநாயகன் - வல்லபை விநாயகனாகியும், உயர்ந்த தாணுவிநாயகன் - எல்லாத்தெய்வங்களினும் மேம்பட்ட நிலைபெறுடைமையால் தனக்குமேலொரு நாயகனில்லாதவனாகியும், தோற்றம் தரும் ஓர் அட்டசித்தி விநாயகன் - புகழைத் தருவதில் ஒப்பற்ற எண்சித்திகளைத் தந்தருளுங்காரணத்தால் சித்திவிநாயக னென்னுந் திருநாமத்தை உடையவனாகியும் விளங்குகின்ற, மதுரை சித்திவிநாயகன் -

மதுரைப்பதியி லெழுந்தருளி யிருக்கும் சித்திவிநாயகனுடைய, இருதாள் - ஞானசத்தி கிரியாசத்தியென்னும் இருதிருவடிகளை, சிரத்தில் வைப்பாம் - (யாம்) சிரத்தானம் போன்ற எம்முடைய அறிவின்கண் இருத்துவாம் என்றவாறு.

(பொழிப்புரை.) முத்தியின் உண்மையை அறியவிரும்பி வினவுகின்ற நூற்பொருள்களில் விரிந்த மனத்தின்கண் மாறுபாடு அறுதற் பொருட்டு, இருளை யோட்டி யொளியைச்செய்து நிலமுதலிய பொருள்களை விளக்குகின்ற அந்தப் பகலுக்கு நாயகனான சூரியன்போல விரைந்து தோன்றி, அஞ்ஞானத்தைக் கெடுத்து, ஞானத்தை விளங்கச்செய்து, சிவனோடு பிரிப்பின்றி நிற்றலை உணர்தலாகிய சிவபுண்ணியத்தை உதிக்கச்செய்யுங் காரணத்தால் வல்லபை விநாயகனாகியும், எல்லாத்தெய்வங்களினும் மேம்பட்ட நிலைபேறுடைமையால் தனக்குமேல் நாயகன் இல்லாதவனாகியும், புகழைத் தருவதில் ஒப்பற்ற எண் சித்திகளைத் தந்தருளுங்காரணத்தால் சித்திவிநாயகன் என்னும் திருநாமத்தை உடையவனாகியும் விளங்குகின்ற மதுரைப் பதியின்கண் எழுந்தருளியிருக்கும் சித்திவிநாயகனுடைய ஞானசத்தி கிரியாசத்தி யென்னு மிருதிருவடிகளை, யாம் சிரத்தானம்போன்ற எம்முடைய அறிவின்கண் இருத்துவாம் எ - று.

(கருத்துரை.) வல்லபை விநாயகராயும், தனக்குமேல் நாயகன் இல்லாதவராயும், சித்திவிநாயகர் என்னும் காரணத்திருநாம முடையவராயும் விளங்குகின்ற மதுரைச் சித்திவிநாயகருடைய இருதிருவடிகளை வணங்குவாம் என்பதாம்.

மூரணறவே என்றவிடத்துள்ள ஏகாரம் அசைநிலை.

மூரண் - முத்திநிலையில் உயிரும்சிவமும் பேதமே யென்றலும், அபேதமே யென்றலும், பேதாபேதமே யென்றலுமாம். பொருட்டன்மைபற்றிப் பேதமாயும், பிரித்தறியவாராத கலப்புத்தன்மைபற்றி அபேதமாயும், சிவானுபவத்திலும் உடனின்று உயிரின்பொருட்டு அனுபவித்தல்பற்றிப் பேதாபேதமாயும் நிற்றலே முத்திநிலையின் உண்மை.

அன்பர் இதயத்து அவர்கருதிய வடிவோடு விரைந்து சேறலின் 'முடுகிவந்து' என்றார். இக்கருத்தே பற்றி, 'மலர்மிசை ஏகினான்' என்றனர் திருவள்ளுவரும். சேறல் என்பது வெளிப்பட்டுத்தோன்றுதல் மாத்திரையேயன்றிப் பிறிதில்லை யாதலின், வியாபகத்திற் கிழுக்கில்லை யென்பதறிந்து கொள்க.

திவா என்பது திவி எனத் திரிந்து நின்றது. திவா - பகல். அகரம், சூரியன் நிலமுதலிய பொருள்களை விளக்குதலைச் சுட்டிற்று.

அவித்தையொழித்து வித்தையளித்து என்னும் பொருளடைக்கேற்ப உவமையினும் இருளையோட்டி யொளியைச் செய்து என்பது வருவிக்கப் பட்டது. அவித்தை வித்தை யென்ற ஈரிடத்தும் ஐயுருபு விரித்துரைக்க.

அறமாவது மனம் வாக்கு காயங்களாற் செய்யப்படுவது. அது, தொடர்புநோக்கிச் செய்வதும், தொடர்புநோக்காது செய்வதும், சிவனைநோக்கிச்செய்வதுமென முத்திறப்படும். அவை, முறையே பாசஅறம், பசுஅறம், பதி அறம் எனப் பெயர் பெறும். அவற்றுள் பதிஅறம், சரியை கிரியை யோகம் ஞானம் எனநான்கு திறப்படும். அந்தஞானமும், கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டையென நான்குதிறப்படும். இந்த நிட்டையாகிய சிவ புண்ணியமே ஈண்டு அறமெனப்பட்டது. ஆக்குதல் - தோன்றச்செய்தல்.

அணிமாமுதலிய எட்டுச்சித்திகளும் புகழைத்தருவனவேயன்றி முத்தியைத் தாராவாதலின், 'தோற்றந் தருமோராட்ட சித்தி' யென்றார். தோற்றம் - புகழ்.

சித்திவிநாயகனென்னு மிரண்டனுள் முன்னையது காரணப்பெயராய் நின்று சொருபத்திருமேனியையும், பின்னையது இடுகுறிப்பெயராய் நின்று தடத்தமாகிய உருவத்திருமேனியையும் குறித்தவாறாம்.

ஞானம் கிரியை யென்னும் இரண்டுசத்திகளையும் இருதாள் என்றார்.

அறிவின்கண் இருத்துதலாவது அவனுடைய ஞானசத்தி கிரியாசத்திகளையின்றித் தான் ஒன்றனை யறிதலும் செய்தலும் கூடாதென அறிந்து, தன்னறிவுஞ் செயலும் அவனருள்வழி நிற்றல்.

அவ்வாறு நிற்றலும் அயராது நிற்கவேண்டுமென்பது தோன்ற 'வைப்பாம்' என்றார். யாம் தோன்றா எழுவாய். "அவித்தையியல் பனைந்து மழிந்து" என்ற பாடபேதமும் உண்டு.

---

## சோமசுந்தரக் கடவுள் வணக்கம்.

இருள்விளையாட்டொளிவிளையாட்டெனவுணர்த்திமறைத்தமலத்
  தூடு நீங்கா
மருள்விளையாட் டாருயிர்கண் மயங்காம லகிலமெலா
  மகிழ்ந்து போற்றி
அருள்விளையாட் டெனவியப்ப வருந்தமிழ்நாட் டணிமதுரை
  யதனு ளெண்ணெண்
திருவிளையாட் டுடையபிரான் செங்கமலப் பொற்பாதஞ்
  சென்னி சேர்ப்பாம்.

(இ - ள்.) இருள் விளையாட்டு - அறியாமையைச் செய்யும் செயலை, ஒளிவிளையாட்டு எனஉணர்த்தி - அறிவினைச் செய்யுஞ்செயலெனத் தோன்

றச்செய்து, மறைத்த மலத்தூடு நீங்கா - அறியாமையினைச்செய்யும் ஆணவ மலத்தினின்றும் நீங்காத, மருள்விளையாட்டு ஆருயிர்கள் - மயக்கத்தைத் தரும் செயலோடுகூடிய உயிர்கள், மயங்காமல் - மயக்கத்தை யடையாம லும், அகிலம் எலாம் மகிழ்ந்து போற்றி - உலகமனைத்திலுள்ளாரனைவரும் மகிழ்ந்து துதித்து, அருள்விளையாட்டென வியப்ப - திருவருட் செயலெ ன்று கருதி அதிசயிக்கவும், அரும்தமிழ்நாட்டு அணிமதுரை அதனுள் - அரி யதமிழ்நாட்டினுள் அழகிய மதுரைப் பதியினிடத்து, எண்ணெண் திரு விளையாட்டு உடையபிரான் - அறுபத்துநான்கு திருவிளையாடல்களைச் செய்தருளிய சோமசுந்தரக்கடவுளினது, செங்கமலப் பொற்பாதம் சென்னி சேர்ப்பாம் - செந்தாமரை மலர் போலும் அழகிய திருவடிகளைச் சிரமேற் சூட்டுவாம் எ - று.

(பொ - ரை.) அறியாமையைச் செய்யுஞ் செயலை அறிவினைச் செய் யுஞ் செயலெனத் தோன்றச்செய்து, அறியாமையினைச் செய்யும் ஆணவம லத்தினின்றும் நீங்காத மயக்கத்தைத் தருஞ்செயலோடு கூடிய உயிர்கள், மயக்கத்தையடையாமலும் உலகம் அனைத்திலும் உள்ளாரனைவரும் மகிழ்ந் து துதித்துத் திருவருட்செயலென்று கருதி அதிசயிக்கவும், அரியதமிழ் நாட்டினுள் அழகிய மதுரைப்பதியினிடத்து, அறுபத்துநான்கு திருவிளை யாடல்களைச் செய்தருளிய சோமசுந்தரக்கடவுளினது செந்தாமரை மலர் போலும் அழகிய திருவடிகளைச் சிரமேற் சூட்டுவாம் எ - று.

(க - ரை.) மயக்கத்தோடு கூடிய மண்ணுலகத் துள்ளார் மயங்காம லும், ஏனைய உலகத்துள்ளார் அதிசயிக்கவும், மதுரைப்பதியில் அறுபத்து நான்கு திருவிளையாடல்களைச்செய்தருளிய சோமசுந்தரக்கடவுள் திருவடி களைச் சிரமேற்சூட்டுவாம் என்பதாம்.

இருள், அறியாமையைச் செய்வது. ஒளி, அறிவைச்செய்வது. மருள், மயக்கத்தைச் செய்வது. மயக்கமாவது, ஒன்றை மற்றொன்றாகக் கருதுதல். அதாவது கட்டையைக் கள்வனெனக் கருதுதல் போல்வன.

மண்ணுலகத்துள்ளார் மயக்கத்தைச்செய்யும் அசுத்தமாயாகாரியமான சரீரத்தோடுகூடியவராதலின் தானல்லாததேகத்தைத்தானென்றும், தன்னு டையனவல்லாத பொருள்களைத் தன்னுடையனவென்றுங் கருதுபவராவர். இவ்வாறு கருதும்படிசெய்வது ஆணவமலம். இங்ஙனம் மலத்தால் மறைக் கப்பட்டு மயக்க அறிவோடு கூடிய உயிர்களும் சிவபெருமான் செய்தருளிய திருவிளையாடல்களை உண்மையறிவோடுகூடிக் கண்டாரென்பது தோன்ற "மருள்விளையாட் டாருயிர்கள் மயங்காமல்" என்றும், மண்ணுலகத்துள்ள ஞானிகளும் ஏனையஉலகத்துள்ள இந்திரன் முதலிய தேவர்களும் மகிழ்ந் து துதித்தாரென்பது தோன்ற "அகிலம் எலாம் மகிழ்ந்துபோற்றி" என்

றும், உயிர்களிடத்து வைத்த கருணைகாரணமாகச் செய்த திருவிளையாட்டென்பது தோன்ற 'அருள்விளையாட்டு' என்றும் கூறினர்.

ஆரியமொழி தமிழ்மொழி யிரண்டற்கும் சிவபெருமானே முதலாசிரியராவர். ஆயினும், அவர் தமிழ்மொழியை வளர்த்தற்குச் சங்கப் புலவருளொருவராய் வீற்றிருந்தவாறுபோல், ஆரியத்துக்குச் செய்யவில்லை. அந்தச்சங்கம் மூன்றனுள் கடைச்சங்கம் இருந்த நகரம் மதுரையேயாம். ஆதலின், அருந்தமிழ்நாடென்றும், அணி மதுரை யென்றுங் கூறினர்.

அகிலமெலாம் என்பது உலகம் அனைத்தினும் உள்ளாரைக் குறித்தது. (உ)

---

## அங்கயற்கணம்மை வணக்கம்.

இருளாகி வெளியாகி யிருள்வெளிக டமைநீங்கி
 யெழுதா வேதம்
தெருளாத பரையாகி திரிவிதசத் திகளாகிச்
 சிந்தைக் கெய்தாப்
பொருளாகி நின்றபிரா னணிவெள்ளி யம்பலத்துட்
 புரியா நின்ற
அருளாடல் கண்டுவந்த வங்கயற்கண் ணம்மைபதத்
 தன்பு செய்வாம்.

(இ - ள்.) இருளாகி - பொருள்களை மறைக்கும் இருளாகியும், வெளியாகி - பொருள்களைவிளக்கும் ஒளியாகியும், இருள்வெளிகள் தமைநீங்கி - இருளையும் ஒளியையுங் கடந்து, எழுதாவேதம் தெருளாத பரையாகி - ஒலிரூபமானமறைகளால் அறியப்படாத பராசத்தியாகியும், திரிவிதசத்திகளாகி - இச்சை ஞானம் கிரியை யென்னும் மூன்று வகையான சத்திகளாகியும் (விளங்கிக்கொண்டு), சிந்தைக்கு எய்தாப் பொருளாகி நின்றபிரான் - விடயங்களை அறியும் உயிரின் அறிவுக்கு எட்டாத பொருளாய் நின்ற சிவபெருமான், அணி வெள்ளி அம்பலத்துள் அருள் புரியாநின்ற ஆடல்கண்டு உவந்த - அழகிய வெள்ளியம்பலத்தின்கண் உயிர்களிடத்து வைத்த அருளால் செய்யும் பஞ்சகிருத்திய நடனத்தைக்கண்டு மகிழ்ந்த, அம் கயல் கண் அம்மை பதத்து அன்புசெய்வாம் - அங்கயற்கண் ணம்மையாரது திருவடிகளினிடத்து அன்புசெய்வாம் எ - று.

(பொ - ரை.) பொருள்களை மறைக்கும் இருளாகியும், பொருள்களை விளக்கும் ஒளியாகியும், இருளையும் ஒளியையுங் கடந்து, ஒலிரூபமானமறைகளாலறியப்படாத பராசத்தியாகியும், இச்சை ஞானம்கிரியையென்னும் மூன்று வகையான சத்திகளாகியும் விளங்கிக்கொண்டு, விடயங்களை அறி

யும் உயிரின் அறிவுக்கு எட்டாதபொருளாய் நின்ற சிவபெருமான், அழகிய வெள்ளியம்பலத்தின்கண் உயிர்களிடத்து வைத்த அருளாற்செய்யும் பஞ்ச கிருத்திய நடனத்தைக் கண்டு மகிழ்ந்த அங்கயற்கண் ணம்மையாரது திருவடிகளினிடத்து அன்புசெய்வாம் எ - று.

(க - ரை.) வெள்ளியம்பலத்தின்கண் சிவபெருமானது திருநடனத்தைக் கண்டு மகிழ்ந்த அங்கயற்கண்ணம்மையாரது திருவடிகளினிடத்து அன்புசெய்வாம் என்பதாம்.

பொருள்கள் ஒடுங்கியிருக்கும் நிலையை 'இருள்' என்றும், அவைவிளங்கித் தோன்றும் நிலையை 'வெளி' யென்றும், இவ்விரு நிலையினும் சத்தியின் கலப்பு உண்டென்பது தோன்ற 'இருளாகி வெளியாகி' யென்றும், கலந்து நிற்பினும் பற்றின்றி நிற்கு மென்பது தோன்ற 'இருள்வெளிகள் தமைநீங்கி' யென்றும், இங்ஙனம் நிற்கும்நிலையே பராசத்தி வடிவமென்பது தோன்ற 'பரை'யென்றும், இந்தப் பராசத்தியின் நிலை, எல்லாப் பொருள்களையும் அறிவிக்கும் மறைகளாலும் அறியப்படாதது என்பது தோன்ற 'வேதம் தெருளாதபரையாகி' யென்றும், பராசத்தியின் வியாபாரபேதமே இச்சை ஞானம் கிரியை யென்னும் மூவகைச் சத்திகளென்பது தோன்ற 'பரையாகித் திரிவிதசத்திகளாகி' யென்றும் கூறினர். கூறவே, பராசத்தியானது இச்சைஞானம் கிரியை என்னும் பேதத்தை யடையும் அவசரநிலை ஆதிசத்தி யெனப்பட்டு, பராசத்தி ஆதிசத்தி இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தி யென ஐவகைச் சத்திகளுங் கூறப்பட்டவாறுயிற்று.

வேதம் பொருள்களை அறிவிக்கும் ஒலிரூப மாதலின் எழுதாவேதம் எனப்பட்டது. எழுதாவேதம் வரிவடிவா யெழுதப்படாத வேதம். வரிவடிவில் வேதங்காணப்படுகிறதே யென ஆசங்கிப்பார்க்கு, முற்காலத்தில் வேதம் ஒலிவடிவாகவே யிருந்தது; பிற்காலத்தில் கற்பவருக்கு உபகாரமாக வரிவடிவில் எழுதப்பட்டது என விடையிறுப்பர். அவ்வாறுயின், முற்காலத்திலுங் கற்பவருக்கு உபகாரமாக வரிவடிவில் இருக்க வேண்டுமென்பது பெறப்படும். ஆயின், வேறென்னையோவெனின்.- வேதமென்பது வாக்கியம் மாத்திரமன்று; சுரங்களோடுகூடிய வாக்கியமே வேதமெனப்படும். சுரங்களோ வரிவடிவில் எழுதப்படுவனவல்ல. ஆதலின், எக்காலத்தும் வேதம் ஒலிவடிவமென்பது துணியப்படு மென்க. சுருதியென்பதும் ஒலிவடிவமென்பதுபற்றி வந்த பெயர்.

உயிர்களினது சுட்டறிவுக் கெட்டாத பரம்பொருள், அரசன்மீது வைத்த கருணையால் வெள்ளியம்பலத்தின்கண் மாறியாடினரென்பது தோன்ற 'சிந்தைக்கெய்தாப் பொருளாகி நின்றபிரான் வெள்ளியம்பலத்துட் புரியாநின்ற அருளாடல்' என்றும், அரசன்மீது வைத்த கருணைகாரணமாக

ஆடினாரேனும், கருணையேவடிவாயுள்ள அம்பிகைதான் காண்டற்கும், கண்டு மகிழ்தற்குந் தகுதியுடையவளென்பது தோன்ற 'கண்டு உவந்த அங்கயற் கண்ணம்மை' யென்றுங் கூறியவாறும்.

அம்மையார் காண ஆடினதனாலும், அருள் காரணமாக ஆடினாரென்றலுமொன்று. திரிவித சத்திகளாகி அருளாடல் கண்டு உவந்த அங்கயற் கண்ணம்மை யெனக் கூட்டுக.

'உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்' என்னும் விதிப்படி உவந்த என்பது வருமொழியாய் வர, கண்டு என்பதிலுள்ள உகரங் கெட்டது.

அழகிய கயல்மீன் போலுங் கண்ணிணையுடைமையால், அங்கயற்கண்ணம்மையென்பது ஏதுப்பெயர். (௫)

பாயிரம் முற்றிற்று.

---

## நூல்.

(அவதாரிகை.) உமாதேவியார் சிவபெருமானை நமஸ்கரித்து முத்தியை விரும்பும் உயிர்களின் பொருட்டு, முத்திக்குக் காரணமான ஞானத்தையும் ஞானசாரத்தையும் அருளிச் செய்ய வேண்டு மென்று பிரார்த்திக்கின்றார்.

1. வானவர் தலைவா விந்த மன்னுயிர் முத்தி யெய்த
ஞானவா சார ஞான மருளினா லருளென் றேத்தி
மானம யில்வே லொண்கண் மணமலி குமுதச் செவ்வாய்த்
தேனமர் குழலா டேவன் றிருந்தடி பணிந்து சொன்னாள்.

(இ - ள்.) மான் அமர் - மான்போலும் பார்வையினையும், அயில்வேல் ஒண்கண் - கூர்மையான வேலையொத்து விளங்குகின்ற கண்களையும், மண மலி குமுதச் செவ்வாய் - வாசனை நிறைந்த செவ்வாம்பல்போன்ற சிவந்த வாயினையும், தேனமர்குழலாள் - வண்டுகள் தங்கிய மலரை யணிந்த கூந்தலையும் உடைய உமாதேவியார், தேவன் திருந்து அடி பணிந்து ஏத்தி - சிவபெருமானது குற்றமற்ற திருவடிகளை நமஸ்கரித்துத் துதித்து, வானவர் தலைவா - பிரமவிட்டுணுக்கள் முதலிய தேவர்களுக் கெல்லாம் நாயகனே!, இந்த மன் உயிர் முத்தி எய்த - சத்திநிபாதம் உடைய நித்தியமான உயிர்கள் ஆணவமலத்தினின்றும் நீங்குதற்பொருட்டு, ஞானம் ஞானஆசாரம் அருளினால் அருளென்று சொன்னாள் - ஞானத்தையும் ஞானசாரத்தையும் கிருபையினால் அடியேனுக்குத் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தார் எ - று.

(பொ - ரை.) மான்போலும் பார்வையினையும், கூர்மையானவேலையொத்து விளங்குகின்ற கண்களையும், வாசனை நிறைந்த செவ்வாம்பல்

போன்ற சிவந்தவாயினையும், வண்டுகள் தங்கிய மலரையணிந்த கூந்தலையும் உடைய உமாதேவியார், சிவபெருமானது குற்றமற்ற திருவடிகளை நமஸ்கரித்துத் துதித்து, பிரமவிட்டுணுக்கள் முதலிய தேவர்களுக்கெல்லாம் நாயகனே! சத்திநிபாதம் உடைய நித்தியமான உயிர்கள், ஆணவமலத்தில் நின்றும் நீங்குதற்பொருட்டு, ஞானத்தையும் ஞானசாரத்தையும் கிருபையினால் அடியேனுக்குத் திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தார் எ - று.

(க - ரை.) உயிர்களின் பொருட்டு ஞானத்தையும் ஞானசாரத்தையும் அருளிச்செய்யும் வண்ணம் சிவபெருமானை உமாதேவியார் பிரார்த்தித்தார் என்பதாம்.

இந்த என்னும் சுட்டு நெருங்கியிருக்கும் பொருளைச் சுட்டுமாதலின், இந்தமன்னுயிரென்பது, சத்தியுடன் நெருங்கியிருக்கும் தீவிரதர சத்திநிபாதம் உடைய உயிரென்னும் பொருள் குறித்தது.

சத்திநிபாதம் - மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரமென நால்வகைப்படும். சத்திநிபாதத்திற்குக் காரணமான மலபரிபாகமும் இவ்வாறே நால்வகைப்படும். மந்ததரமாவது, உலகப்பற்று நான்கிலொரு கூறு நீங்கத் திருவருள் காற்கூறு பதிதல். மந்தமாவது, உலகப்பற்று இருகூறு நீங்கத் திருவருள் இருகூறு பதிதல். தீவிரமாவது, உலகப்பற்று மூன்று கூறுநீங்கத் திருவருள் மூன்றுகூறுபதிதல். தீவிரதரமாவது, உலகப்பற்று முற்றும் நீங்கத் திருவருள் முற்றும் பதிதல்.

மன் என்னும் அடை, பிரமத்தின் விகாரமே உயிரென்பாரை மறுத்து, பிரமம்போல உயிரும் நித்தப்பொருளென்பதை விளக்கிற்று. இன்னும் அந்த அடை முத்தியில் உயிரென்பதொன்றில்லை யென்னும் அவர் கூற்றையும் மறுத்தவாறும்.

ஞானம் ஞானஆசார மென மாறுக. ஆன ஆசார மெனப் பாடங்கொண்டு, ஞானத்திற் கான ஆசாரமெனக்கொள்ளுதலு மொன்று. (க)

## ஞான இயல்.

(அ - கை.) உமா தேவியாருடைய பிரார்த்தனைக்குச் சிவபெருமான் இணங்கி, ஞானத்தையும் ஞானஆசாரத்தையுங் கூறத் தொடங்கி, அவற்றின் பெருமை கூறுகின்றார்.

2. உத்தம குணத்தாய் ஞான மொழுங்கெனு மிரண்டி னாலே
மெய்த்தவர் முத்தி யெய்தும் விதியினை விரித்து ரைப்பன்
இத்திற முரைத்த காலை யிதனினால் விளங்கா தாருக்
கெத்தனை யனந்த கோடி நாலினு மினிவி ளங்கா.

(இ - ள்.) உத்தம குணத்தாய் - உத்தமமான குணத்தை யுடையவளே, ஞானம் ஒழுங்கு எனும் இரண்டினால் - ஞானமும் ஞானசாரமு மென்னும் இரண்டினாலும், மெய்த்தவர் - ஞானநெறிநிற்பவர்கள், முத்தி எய்தும் விதியினை விரித்து உரைப்பன் - முத்தியை அடையும் முறைமையினை விரித்துக் கூறுகின்றேன், இத்திறம் உரைத்தகாலை - இவ்வாறு கூறியபொழுது, இதனினால் விளங்காதாருக்கு - இவ்வுறுதி மொழியால் (முத்தியை அடையும் முறை) விளங்காதவர்க்கு, எத்தனை அனந்தகோடி நூலினும் இனி விளங்கா - எவ்விதமான பலநூல்களாலும் இனி விளங்கமாட்டாது எ - று.

(பொ - ரை.) உத்தமமான குணத்தையுடையவளே! ஞானமும் ஞானசாரமுமென்னும் இரண்டினாலும் ஞானநெறி நிற்பவர்கள் முத்தியை அடையும் முறைமையினை விரித்துக் கூறுகின்றேன். இவ்வாறு கூறிய பொழுது இவ்வுறுதி மொழியால் முத்தியை அடையும் முறை விளங்காதவர்க்கு எவ்விதமான பல நூல்களாலும் இனி விளங்கமாட்டாது. எ - று.

(க - ரை.) ஞானம் ஞானசாரமென்னும் இரண்டினாலும் ஞானநெறி நிற்பவர் முத்தியடைவர் என்பதாம்.

குணம், சித்குணம் சடகுணம் என இரு வகைப்படும். சித்குண மென்பது, சித்துப்பொருளாகிய உயிரின் குணமும், இறைவன் குணமுமென இருவகைப்படும். சடகுண மென்பது, சடப்பொருளாகிய மாயையின் குணம். இந்தச் சடகுணம், சாத்துவிகம், இராசதம், தாமதம் என மூத்திறப்படும். இம்மூன்று குணங்களும் உயிருக்குச் சடப்பொருளோடு கூடிப்பிரிதலாகிய பிறப்பிறப்புக்களைச் செய்யுமாதலின், இம்மூன்றனுள் இராசத தாமதங்கள் அதமமும், சாத்துவிகம் மத்திமமு மெனப்படும். ஏனைய சித்துக் குணம் இரண்டனுள், உயிரின் குணமானது இறைவன் குணத்தையாவது மாயையின் குணத்தையாவது சார்ந்து நின்று தொழிற்படு மல்லது தனித்து நின்று தொழிற்படுமா றில்லை. இறைவன் குண மென்பது அருளேயாம். அருளென்பது சத்தியேயாம். சத்தியாகிய உமாதேவியார் உயிர்களைப் பிறப்பிறப்புக்களினின்று நீக்கிச் சிவபெருமானோடு இரண்டறக்கலந்து நிற்கச் செய்தல்பற்றி, 'உத்தம குணத்தாய்' என்று அழைக்கப்பட்டனர்.

மெய்த்தவர் - ஞானி. தவம், பொய்த்தவம் மெய்த்தவம் என இருவகைப்படும். பொய்த்தவம், கடவுளல்லாதாரைக் கடவுளெனக் கருதிச் செய்யும் வேள்விமுதலியன. இவை, தத்தமக்குரிய சுவர்க்காதி பலன்களைத் தந்து கெட்டொழிதல் பற்றியும் பொய்த்தவ மெனப்பட்டன. மெய்த்தவம், சிவபெருமானைக் கடவுளெனக் கருதிச் செய்யும் சரியை முதலியன. சரியை சாலோகத்தைத் தந்து கிரியைக்கு வித்தாயும், கிரியை சாமீபத்தைத்

தந்து யோகத்திற்கு வித்தாயும், யோகம் சாரூபத்தைத் தந்து ஞானத்திற்குவித்தாயும், ஞானம் முத்திக்குவித்தாயும் ஆகின்றன. மெய்த்தெய்வமாகிய சிவபெருமானை நோக்கிய வழிபாடாதல் பற்றியும், தத்தம் பலனைத் தந்து அழிதலின்றி மேலைக்கு வித்தாதல் பற்றியும், சரியை முதலிய நான்கும் அரும்பு மலர் காய் கனி போல் உவமிக்கப்பட்டு மெய்த்தவம் எனப்பட்டன. எனினும், தனக்கு மேலொன்றில்லாத ஞானமே மெய்த்தவமெனச் சிறப்பித்துக் கூறப்படும்.

சரியை முதலியன தத்தம் பலனைத்தந்து அழியாமைபற்றி இவற்றை இறப்பில் தவம் எனச் சிவஞானபோதம் கூறிற்று (அ - சூ - ம், க - அதி). ஞானம் மெய்த்தவமெனச் சிறப்பித்துக் கூறப்படுமென்னுங் கருத்துப்பற்றியே, ஞானியைப் 'பானுணர்வி னுலுணரும் மெய்த்தவர்'' எனச் சிவஞானபோதம் கூறிற்று (கஉ - சூ - ம், உ - அதி). இவ்வாறு கூறியமுறையில் மெய்த்தவர் ஞானநெறியில் நிற்பவராவரென்பது இனிது விளங்கினமை காண்க. முத்தி யெய்தும் என்பதனைச் சாரவைத்தோதியதனாலும், மெய்த்தவர் என்னுஞ் சொல்லிற்கு ஞானநெறியுடையாரே பொருளென்பது கடைப்பிடிக்க. இரண்டினாலே என்றவிடத்து ஏகாரம் அசை. உம்மைதொக்குநின்றது. விளங்காது என்னும் பொருள்பட நுவ்விகுதி ஈற்றில் தொக்குநின்றது. (உ)

(அ - கை.) ஞானத்தைப் பெறுதற்குரிய அதிகாரி யிலக்கணங் கூறுகின்றார்.

3. ஆசைபய மையமகங் காரமுயிர்க் கச்சமின்றிப்
பாசம்விடல் கருணையுட னொருமைபத்தி ஞானமுத்திக்
காசைமிக வுடையரா யோகதற் பரருமாகிப்
பேசியகா லோத்தரத்தின் வழிநிற்பர் பெரியர்தாமே.

(இ - ள்.) ஆசை (இன்றி) - பிறருடைய பொருளில் ஆசையின்றியும், பயம் (இன்றி) - அச்சமின்றியும், ஐயம் (இன்றி) - சந்தேகமின்றியும், அகங்காரம் (இன்றி) - அகங்காரமின்றியும், உயிர்க்கு அச்சம் இன்றி - உயிர்கட்கு அச்சம் தரத்தக்க செயலின்றியும், பாசம் விடல் - உடலினிடத்தும் உடற்சார்பான உறவினர் முதலியோரிடத்தும் பற்றைவிட்டு, கருணையுடன் - அன்னவரிடத்தும் ஏனையோரிடத்தும் கடமையாகக் கருணையுடன், ஒருமை - விடப்பட்ட பொருள்களை மீளப்பற்றாத ஒருமைப்பாடும், பத்தி - இறைவனிடத்து இடையறாத பத்தியும், ஞானம் - இறைவனைவிட்டுப் பிரியாதிருக்கும் தன்னுண்மையினை ஆராயும் ஞானமும், முத்திக்கு ஆசை - முத்தியின்கண் ஆசையும், மிக உடையராய் - எப்பொழுது முடையராகி, யோக தற்பரரும் ஆகி - யோக ஒழுக்கமும் உடையவராய், காலோத்தரத்

தின் பேசிய வழிநிற்பர் பெரியர் - இந்தத் தேவிகாலோத்தரத்திற் கூறப் பட்ட ஞானநெறியில் ஒழுகுவோர் பெரியராவர் எ - று.

(பொ - ரை.) பிறருடைய பொருளில் ஆசையின்றியும், அச்சமின்றி யும், சந்தேகமின்றியும், அகங்காரமின்றியும், உயிர்கட்கு அச்சந் தரத்தக்க செயலின்றியும், உடலினிடத்தும் உடற்சார்பான உறவினர் முதலியோரி டத்தும் பற்றைவிட்டு, அன்னவரிடத்தும் ஏனையோரிடத்தும் கடமையா கக் கருணையுடன், விடப்பட்ட பொருள்களை மீளப்பற்றாத ஒருமைப்பாடும், இறைவனிடத்து இடையறாத பத்தியும், இறைவனைவிட்டுப் பிரியாதிருக் குந் தன் உண்மையினை ஆராயும் ஞானமும், முத்தியின்கண் ஆசையும் எப் பொழுது முடையராகி, யோக வொழுக்கமும் உடையவராய், இந்தத் தே விகாலோத்தரத்திற் கூறப்பட்ட ஞானநெறியில் ஒழுகுவோர் பெரியராவர் எ - று.

(க - ரை.) உலகப்பற்றைவிட்டு உயிர்களிடத்துக் கருணையும், யோக வொழுக்கமும் உடையவரே ஞானாதிகாரியாவர் என்பதாம்.

காலோத்தரம் - உயிர்களுடைய பக்குவகாலத்தில் உபதேசிக்கத்தக்க முடிவான ஞானமும் ஞானாசாரமும். இவை தேவிக்கு உபதேசிக்கப்பட் டமையால் தேவிகாலோத்தரம் என்பது இந்நூற்குப் பெயராயிற்று.

பிறர்பொருளில் ஆசைவைத்தால், பொருளுடையான் அறியின் துன் புறுத்துவா னென்னும் அச்சம் உண்டாம். அச்சம் உண்டாகவே, எவ்வித துன்பத்தைச் செய்வானோவென்னும் ஐயம் நிகழும். ஐயம் நிகழவே, பொரு ளுடையானைக் கெடுத்துவிட வேண்டு மென்னும் அகங்காரம் உண்டாம். அகங்காரம் உண்டாகவே, உயிர்கள் அஞ்சத்தக்க செயல் நிகழும். இச்செய லுடையார்க்கு உயிர்ப்பற்றும் உடற்பற்றும் நீங்குமாறில்லை. ஆகவே, பற் றுவிடுதற்கு மேற்கூறப்பட்ட அனைத்தும் நீங்கவேண்டு மென்பது தோன் ற, 'ஆசைபயம் ஐயமகங் காரமுயிர்க் கச்சமின்றிப், பாசம்விடல்' எனவும், தனக்கொரு பயன் கருதி வைக்கப்படும் பற்றுத்தான் பாசமெனப்படும்; எவ் வுயிரிடத்தும் இறைவன் உள்ளீடாய் நிற்றலால் இறைவனைப் பேணுதல் போல உயிர்களைப் பேணுதல் கடமையாமெனக் கருதிக் காத்தல் பாசமாகா தென்பது தோன்ற 'கருணையுடன்' எனவுங் கூறினர். தொடர்பிலாது வைக் கும் பற்றென்பது அறிவித்தற்குக் 'கருணை' யென்னும் மொழியை உபயோ கித்தமை கவனிக்கத்தக்கது.

இவ்வாறு பற்றுவிட்டுக் கருணையுடையனா யிருப்பினும், விடுதலை நிலை யாத விடத்துப் பயனில்லை; அது நிலைத்தவிடத்தும் இறைவனிடத்துப் பத்தியில்லையாயிற் பயனில்லை; பத்தியிருந்தும் அநுபவ ஞானத்திற் கேது வாகிய ஆராய்ச்சிஞான மில்லையாயின் எடுத்த பிறப்பில் பரமுத்தி யடைத

வில்லை; ஆராய்ச்சி ஞான மிருப்பினும், உண்மைமுத்தியில் ஆசையில்லையா யின், அவ்வாராய்ச்சி தன்னைக் கல்வியுடையானெனக் காட்டுதற்கும், பிற ரோடு சொற்போர் புரிதற்கும் உபயோக மாகுமன்றி, அநுபவத்தை உண்டு பண்ணுதலில்லை. முத்தியின்கண் ஆசையிருப்பினும், யோகநெறியில் ஒழு கினலல்லது அது கைகூடுமாறில்லை. ஆகலின், யோகநெறி நின்றோரே ஞா னத்திற் கதிகாரியாவர். இக்கருத்துக்கள் தோன்ற முறைப்படுத்தி ஒன்றன் பின் னொன்றாக வாக்கியங்களை வைத்துக் கூறினமை காண்க.

முத்தி வேண்டா மென்பா ரெவரு மில்லை. ஆகையால், அனைவரும் முத்திக்கு அதிகாரி யாவரோ எனின், ஆகார். ஆசை, யாதானுமோர் சமயத் தில் நிகழ்வதும், எப்பொழுதும் நிகழ்வது மென இருதிறப்படும். எப்பொழு தும் நிகழும் ஆசைதான் ஆசைப்படும் பொருளை யடைதற்குரிய அதிகாரித் தன்மையை உண்டுபண்ணும். ஆகலின், 'முத்திக்காசை மிகவுடையராய்' என்றார். எனினும், ஒருமை பத்தி ஞானம் என்னும் மூன்றும் அவ்வாறே எப்பொழுதும் உடையராயிருத்தல் வேண்டுமென்பது கருத்தாகக் கொள் ளல்வேண்டும். அவ்வாறே கொண்டு உரை கூறினும்.

இன்றி யென்பது ஆசை முதலிய ஒவ்வொன்றினும் சென்று பொருந் தும்.

கருணையுடன் என்றவிடத்துள்ள உடன் என்னும் எண்ணுருபு, யோ கதற்பாரும் என்ற எண்ணும்மையோடு கூட்டி யெண்ணப்படும். தற்பரம் என்பது தது - பரம் எனப்பிரியும். தது - அதில், பரம் - மிக்க ஆசை. யோ கதற்பரர் - யோகத்தில் மிக்க ஆசையுடையவர். தாமே என்பது அசை. (௩)

(அ - கை.) ஞானதிகாரியின் பெருமையைக் கூறுகின்றார்.

4. வாயுவென மறுகுகின்ற மனமடங்கும் வகைதடுப்பான்
ஆயவவ னரிபிரம னிந்திரன்சண் முகன்குருவும்
ஏயபல தேவதைகள் யோகிதபோ தனனறிஞன்
ஆயினெல்லா முடையானு மவனணங்கு நுணங்கிடையாய்.

(இ - ள்.) அணங்கு நுணங்கு இடையாய் - (தனபாரத்தால்) வாடும் நுண்ணிய இடையை யுடையவளே!, வாயு என மறுகுகின்ற மனம் அடங் கும் வகை தடுப்பான் ஆய அவன் - காற்றைப்போலச் சலிக்கும் மனத்தைச் சலியாது ஒருவழிப்படும் வண்ணம் தடுப்பவனாகிய அவன், அரி பிரமன் இந்திரன் சண்முகன் குருவும் - விட்டுணுவும் பிரமனும் இந்திரனும் சண் முகனும் குருவும், ஏய பலதேவதைகள் யோகி தபோதனன் அறிஞன் - பொ ருந்திய பலதேவதைகளும் யோகியும் தவத்தை நிதியாக வுடையவனும் அறி வுடையனு மாவன், ஆயின் எல்லாம் உடையானும் அவன் - ஆராயுமிடத்து எல்லாவற்றையும் உடையவனும் அவனே எ - று.

(பொ - ரை.) தனபாரத்தால் வாடும் நுண்ணிய இடையை உடையவளே! காற்றைப் போலச் சலிக்கும் மனத்தைச் சலியாது ஒருவழிப்படும் வண்ணம் தடுப்பவனாகிய அவன், விட்டுணுவும் பிரமனும் இந்திரனும் சண்முகனும் குருவும் பொருந்திய பலதேவதைகளும் யோகியும் தவத்தை நிதியாக வுடையவனும் அறிவுடையனுமாவன். ஆராயுமிடத்து எல்லாவற்றையும் உடையவனும் அவனே எ - று.

(க - ரை.) மனத்தை ஒருவழிப்பட அடக்க வல்லவன் அறிவுடையவனும் எல்லாவற்றையும் உடையவனு மாவன் என்பதாம்.

அகரச்சுட்டு மேலைச்செய்யுளிற் கூறப்பட்ட பெரியாரைச் சுட்டிற்று. ஆவன் என்பது சொல்லெச்சம். குருவும் என்றவிடத்துள்ள உம்மை எல்லாவிடத்துஞ் சென்று பொருந்தும்.

மனத்தை அடக்கின் தெய்வம் விளங்கித் தோன்றும்; தெய்வத்தன்மையுண்டாம். மனத்தை அடக்குதல்தான் யோகம். அதுதான் தவம். மனத்தை அடக்குபவன் உண்மை ஞானத்தைப் பெறுதற்குரிய னாதலின், அவனே அறிவுடையானெனச் சிறப்பித்துக் கூறப்படுவன். அவனே எல்லாம் உடையன். இக்கருத்துக்கள் தோன்ற வாக்கியங்கள் முறையாக வைக்கப்பட்டமை காண்க. "அறிவுடையா ரெல்லா முடையார் அறிவிலார், என்னுடைய ரேனு மிலர்" என்பது திருக்குறள். (அறிவுடைமை. செ. ௧0.) (௪)

(அ - கை.) மனத்தின் அடக்கமே முத்திநெறி யெனக் கூறுகின்றார்.

5. அறிவுநிலை தவமடக்கம் புண்ணியந்தியா னங்குணங்கள்
நெறியுடைய முத்திநெறி முத்தியுபா யந்நினைக்கின்
மறுகும்வளி யனையமன மடங்குவதொன் றியாதததுவே
அறிவுடையோ ரிவையனைத்து மாமென்றே யறைகுவரால்.

(இ - ள்.) மறுகும் வளி அனைய மனம் அடங்குவது ஒன்று யாது அதுவே - சலிக்கும் வாயுவை யொத்த மனத்தை அடக்குவதாகிய ஒப்பற்றது யாதோ அதுவே, நினைக்கின் - ஆராயுமிடத்து, அறிவு நிலை தவம் அடக்கம் புண்ணியம் தியானம் குணங்கள் நெறியுடைய முத்திநெறி முத்தி உபாயம் - மெய்யறிவும், அவ்வறிவால் அறிந்தவற்றில் உறுதிப்பாடும், பரம்பொருளைச் சிந்திக்குந் தவமும், பொறிகள் புலன்களிற் செல்லாத அடக்கமும், சிவபுண்ணியமும், சிவத்தியானமும், சாந்தம் முதலிய நற்குணங்களும், நேரான முத்திநெறியும், உண்மை முத்தியை அடையச் செய்யும் சாதனமும், ஆம் இவை யனைத்தும் என்று அறிவுடையோர் அறைகுவர் - ஆகிய இவையனைத்து மென்று அறிவுடையோர் கூறுவர் எ - று.

(பொ - ரை.) சலிக்கும் வாயுவை யொத்த மனத்தை அடக்குவதாகிய ஒப்பற்றது யாதோ அதுவே, ஆராயுமிடத்து மெய்யறிவும், அவ்வறிவால்

அறிந்தவற்றில் உறுதிப்பாடும், பரம்பொருளைச் சிந்திக்குந்தவமும், பொறிகள் புலன்களிற் செல்லாத அடக்கமும், சிவபுண்ணியமும், சிவத்தியானமும், சாந்தம் முதலிய நற்குணங்களும், நேரான முத்திநெறியும், உண்மைமுத்தியை அடையச்செய்யுஞ் சாதனமும் ஆகிய இவையனைத்துமென்று அறிவுடையோர் கூறுவர் எ - று.

(க - ரை.) மனத்தினடக்கமே முத்திநெறி முதலிய அனைத்தும் என்பதாம்.

மனம் என்பது சித்தரூபமாய் இஃது ஒன்று தோன்றுகின்றது என்றெண்ணும் சங்கற்பத்தையும், இதுவோ அதுவோ வென்றையுறும் விகற்பத்தையுஞ் செய்யுங் கருவி. எனவே, ஆன்மாவினறிவு சங்கற்பவிகற்பங்களைச் செய்வதற்கு மனங்கருவியாகும் என்பது பெறப்படும். படவே, மனம் அடங்கவேண்டுமாயின், ஆன்மாவினறிவு மனத்தோடு கூடாதிருக்கவேண்டும். ஆன்மாவினறிவோ யாதானும் ஒன்றைச் சார்ந்துநின் றறியும் இயல்பினையுடையது. ஆகலான், ஆன்மாவினறிவு பரம்பொருளைச் சிந்திக்குந் தவத்தினைப் பயிலுதலே மன அடக்கமாகும். இக்கருத்துத் தோன்ற அறிவு முதலியவற்றை முன்னர்க்கூறி, மனத்தினடக்கத்தைப் பின்னர்க் கூறினார். ஏ, ஆல் இரண்டும் அசை. (ரு)

(அ - கை.) மனம் அடங்காமையே பந்தத்தைச் செய்யுமாதலின், முத்தியை அடையவிரும்புவோன் மனத்தை அடக்கவேண்டுமெனக் கூறுகின்றார்.

6. கருத்தடங்கின் முத்தியது கையகலிற் கட்டாகும்
விரித்தபொரு ளிதுவென்ன வறிவுடைய மேதக்கோர்
திருத்தகுநல் லறிவாலே சித்தத்தைத் திறம்பாமல்
அருத்தியுட னிலைநிறுத்து மஃதறிவின் பயனாமால்.

(இ - ள்.) கருத்து அடங்கின் முத்தி - மனம் (விடயங்களிற் செல்லாது தன்னிடத்து) அடங்குமாயின் அதுவே முத்தியாகும், அது கை யகலிற் கட்டு ஆகும் - அந்தமனம் தன்னைவிட்டு நீங்கி விடயங்களிடத்துச் செல்லுமாயின் அதுவே பந்தமாகும், இது விரித்த பொருள் என்ன - இதுவே வேதாகமங்களால் விரித்துக் கூறப்பட்ட பொருளாகுமென்று கருதி, அறிவு உடைய மேதக்கோர் - மெய்யறிவுடைய பெரியோர்கள், திருத்தகு நல் அறிவால் - நின்மலமாயிருக்கின்ற நல்லறிவால், சித்தத்தை திறம்பாமல் - மனத்தைச் சலிக்கவொட்டாது, அருத்தியுடன் நிலைநிறுத்தும் அஃது அறிவின் பயன் ஆம் - ஆசையுடன் நிலைக்கச்செய்கின்ற அதுவே அறிவின் பயனாகிய ஆன்மலாப மாகும் எ - று.

(பொ - ரை.) மனம் விடயங்களிற் செல்லாது தன்னிடத்து அடங்குமாயின், அதுவே முத்தியாகும். அந்த மனம் தன்னைவிட்டு நீங்கி விடயங்க

ளிடத்துச் செல்லுமாயின், அதுவே பந்தமாகும். இதுவே, வேதாகமங்க ளால் விரித்துக் கூறப்பட்ட பொருளாகுமென்று கருதி மெய்யறிவுடைய பெரியோர்கள், நின்மலமாயிருக்கின்ற நல்லறிவால் மனத்தைச் சலிக்கவொட்டாது ஆசையுடன் நிலைக்கச் செய்கின்ற அதுவே அறிவின் பயனாகிய ஆன்ம லாபமாகும் எ - று.

(க - ரை.) மனம் அடங்காமையே பந்தமாகும் என்பதாம்.

ஏ, ஆல், இரண்டும் அசை.

மனம் அடங்காமை பந்தத்திற்கே துவாகு மென்பதைப் 'பந்தமாகும்' என்றார். மனம் அடங்கின் இந்திரியங்களின் அடக்கம் உண்டாகும். மனம் அடங்கவில்லையாயின் இந்திரியங்களின் அடக்கம் உண்டாகாது. இந்திரியங்களின் அடக்கம் இல்லையாயின், ஆன்மாவானது விடயங்களில் குரங்கு போல் தாவிச் செல்லும். இதுவே பந்தமாகும். ஆகையால், மன அடக்கமே முத்திக்கு ஏதுவாகு மென்பது பெறப்படும். இக்கருத்துத் தோன்ற 'கருத் தடங்கின் முத்தி அது கையகலிற் கட்டாகும்' என்றார்.

கை என்பது தன் என்னும் பொருள் குறித்தது. 'கைக்குவந்து விட்டதா?' என்னும் உலகவழக்கானும், 'கூற்றம் குதித்தலும் கைகூடும்' (திருக்குறள் செ - 269) என்னும் நூல்வழக்கானும், இதனை யறிந்து கொள்க.

மனம் அடங்கவேண்டுமாயின், மனத்தொடு கூடி நின்று அம்மனத்தைச் செலுத்தும் அறிவு பரம்பொருளைச் சார்ந்து நிற்றல்வேண்டும். மனத்தைச் சார்ந்து நிற்கும் அறிவு மலத்தொடு கூடிய தாகும். பரம்பொருளைச் சார்ந்துநிற்கும் அறிவு மலத்தொடு கூடாது திருத்தமுற்ற நல்லறிவாகும். இந்த அறிவால் மனம் அடங்குவதில் ஆசைவைத்து மனத்தை யடக்க முயன்றால் அஃது அடங்கும். இக்கருத்துத்தோன்ற, ''திருத்தகுநல் லறிவாலே சித்தத்தைத் திறம்பாமல், அருத்தியுடன் நிலைநிறுத்தும் அஃது அறிவின் பயன்' என்றார்.

மனமடங்குதல்தான் மக்கட்பிறப்பினு லாய பயன். ஆதலின், அஃது அறிவின்பய னெனப்பட்டது.

மன அடக்கத்தி னருமை தோன்ற 'சினமிறக்கக் கற்றாலுஞ் சித்தியெல்லாம் பெற்றாலும், மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே' எனவும், 'சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற திறமரிது' எனவும் தாயுமானசுவாமிக ளருளிச்செய்வாராயினர். (சு)

(அ - கை.) சிவபெருமானிடத்துச் செலுத்தும் அன்பே மேலான இன்பத்தைத் தருமெனக் கூறுகின்றார்.

7. ஒருபொரு ளெக்கா லத்து முளதாகிச் சிறப்பு டைத்தாய்
இருவினை யின்றி மேலா மின்பத்தை யளிப்ப தாகும்

பொருவிலா விதன்மே லன்பு பொருந்திடா தாரு முண்டே
திருவுலா வகன்ற கல்விச் சிறந்தசான் றோர்க டாமே.

(இ - ள்.) ஒருபொருள் - (தலைமைத்தன்மை பிறரொருவருக்கு மின்றித் தனக்கே உடைய) சிவபரம்பொருள், எக்காலத்தும் உளதாகி - செல்காலம் நிகழ்காலம் எதிர்காலமென்னும் மூன்றுகாலத்தும் (ஒருதன்மையாய்) நிலைத்திருப்பதாய், சிறப்பு உடைத்தாய் - (அநாதியே மலமில்லாத) சிறப்பினை உடையதாய், இருவினை இன்றி - நல்வினை தீவினையென்னும் இருவினைகளில்லாது, மேலாம் இன்பத்தை அளிப்பது ஆகும் - (மாயாகாரியங்களாலுண்டாகும் இன்பத்திற்கு) மேலான பேரின்பத்தைத் தரும், திருவுலாஅகன்ற கல்விச் சிறந்தசான்றோர்கள் - தெய்வத்தன்மை விளங்கும் பெருமைவாய்ந்த கல்வியினால் மேம்பட்டு விளங்கும் அறிவுடையோர்களுள், பொரு இலா இதன்மேல் அன்புபொருந்திடாதாரும் உண்டே - ஒப்பில்லாத இந்தச்சிவபரம்பொருளினிடத்து அன்புவையாதாரும் உண்டோ? (இல்லையென்றபடியாம்) எ - று.

(போ - ரை.) (தலைமைத தன்மை பிறரொருவருக்கு மின்றித் தனக்கே உடைய) சிவபரம் பொருள், செல்காலம் நிகழ்காலம் எதிர்காலம் என்னும் மூன்றுகாலத்தும் (ஒருதன்மையாய்) நிலைத்திருப்பதாய் (அநாதியே மலமில்லாத) சிறப்பினை உடையதாய், நல்வினை தீவினையென்னும் இருவினைகளில்லாது (மாயாகாரியங்களாலுண்டாகும் இன்பத்திற்கு) மேலான பேரின்பத்தைத்தரும். தெய்வத்தன்மை விளங்கும் பெருமைவாய்ந்த கல்வியினால் மேம்பட்டு விளங்கும் அறிவுடையோர்களுள் ஒப்பில்லாத இந்தச் சிவபரம் பொருளினிடத்து அன்பு வையாதாரும் உண்டோ? இல்லையென்றபடியாம் எ - று.

(கு - ரை.) சிவபரம் பொருளே பேரின்பத்தைத் தருமாதலின் அப்பொருளினிடத்து அறிவுடையோர் அன்பு வைப்பர் என்பதாம்.

பதி பசு பாசம் என்னும் மூன்றுபொருள்களும் எக்காலத்தும் உள்ளனவேனும், பசு கேவல சகல சுத்தம் என்னும் அவத்தையுட்பட்டும், பாசம் காரியரூபமாய் விரிந்தும் காரணரூபமா யொடுங்கியும் வேறுபடுவனவாம். பதிப்பொருளோ அவ்வாறின்றி என்றும் ஒருதன்மைத்தாய் விளங்கும். இவ்வுண்மை உணர்த்துதற்கு 'ஒருபொருள் எக்காலத்தும் உளதாகி' எனவும், அவ்வாறு வேறுபடாமைக்குக் காரணம் இயல்பாகவே மலமில்லாமை யென்பதுணர்த்துதற்கு 'சிறப்புடைத்தாய்' எனவும், மலமில்லாமையால் அது காரணமாக நிகழும் இருவினையில்லை யென்பதும், அவை யில்லையாகவே, பசுபுண்ணியப்பயனாகிய அழியும் இன்பத்திற்குமேலாகிய பேரின்பவடிவையுடையதாய்த் தன்னிடத்து அன்புடையாருக்குப் பேரின்பத்தை தரும்

என்பதும் உணர்த்துதற்கு, 'இருவினை யின்றி மேலா மின்பத்தை யளிப்பதாகும்' எனவும், நூல்கள் பலவற்றுள்ளும் ஞான நூலே சிறந்ததென்பதும், அதனை யுணர்ந்தோரே சிவபரம் பொருளினிடத்துவிட்டு நீங்காத அன்புடையராவரென்பதும் உணர்த்துதற்குப் பின்னைய இரண்டு அடிகளுங் கூறினர்.

சிறப்புக்கள் பலவற்றுள்ளும் மலமின்மையே மிகச் சிறந்தது. இதுவே, உண்மையில் சிறப்பெனப்படும். இக்கருத்துப்பற்றியே *"சிறப்புஈனும்" எனவும், ‡"சிறப்பென்னும் செம்பொருள்" எனவும் ஆசிரியர் திருவள்ளுவர் அருளிச் செய்வாராயினர்.

இருவினையின்றி மேலாமின்பத்தை யளிப்பதாகுமென்பது, இல்லாமையால் அளிப்பதாகும் எனக் காரணகாரியப் பொருளில் வந்தது; மழையின்றிப்பயிர்வாடிற்று என்றாற்போல. அளிப்பதாகும் என்பது ஒரு சொல். தாமே என்பது அசை. (எ)

(அ - கை.) சிவபெருமானிடத்து அன்புடையவரே சிவசாயுச்சியத்தை யடைவரெனக் கூறுகின்றார்.

8. தூரியனாய்ப் பொருள்களுக்குத் துளக்கமிலா தொன்றாகி
ஆரியமா மநுபவமா மதன்மேலன் புடையவவன்
காரியலுங் குழன்மடவாய் கருதானே யாயிடினும்
நேரியதாய் நித்தமாம் பதமடைவ னெறிமையினால்.

(இ - ள்.) கார் இயலும் குழல்மடவாய் - மேகம்போலுங் கூந்தலையுடைய இளமை வாய்ந்தவளே, பொருள் களுக்குத்தூரியனாய் - (பசுப்பொருள் பாசப்) பொருள்களுக்கு அதீதனாயும், துளக்கம் இலாது ஒன்றாகி - (அப்பொருள்களோடு கலந்து நின்றும் அப்பொருள்கள் போல) நிலைவேறுபடாது என்றும் ஒரு தன்மையுடைய தாகியும், ஆரியம் ஆம் அநுபவம் ஆம் - செல்வமாயும் (முத்தர்களால்) அநுபவிக்கப் படுவதாயும் உள்ள, அதன்மேல் அன்புஉடைய அவன் - சிவபரம்பொருளினிடத்து விட்டு நீங்காத அன்பு வைத்திருப்பவன் (எவனோ) அவன், நேரியது ஆய் நித்தம் ஆம் பதம் கருதானே ஆயிடினும் - அதிசூக்குமமாயும் மாறுதலை யடையாததாயும் உள்ள முத்தியை விரும்பாதவனாக இருப்பினும், நெறிமையினால் அடைவன் - அன்புவைத்திருக்கும் முறைமையினால் அதனையடைவன் எ - று.

(போ - ரை.) மேகம்போலுங் கூந்தலை யுடைய இளமைவாய்ந்தவளே! (பசுப்பொருள் பாசப்) பொருள்களுக்கு அதீதனாயும், அப்பொருள்க

---

* திருக்குறள் அறன்வலியுறுத்தல். செ. க.
‡ ஷை மெய்யுணர்தல். செ. அ.

ளோடு கலந்து நின்றும் அப்பொருள்கள்போல நிலை வேறுபடாது என்றும் ஒரு தன்மையுடையதாகியும், செல்வமாயும், முத்தர்களால் அநுபவிக்கப் படுவதாயும் உள்ள சிவபரம் பொருளினிடத்துவிட்டு நீங்காத அன்புவைத் திருப்பவம் (எவனோ) அவன், அதிசூக்குமமாயும் மாறுதலை யடையாததா யும் உள்ளமுத்தியை விரும்பாதவனாக இருப்பினும், அன்புவைத்திருக்கும் முறைமையினால் அதனையடைவன் எ - று.

(க - ரை.) சிவபெருமானிடத்து அன்புடையவன் முத்தியை விரும்ப வில்லையாயினும் அதனை யடைவன் என்பதாம்.

தூரியன் - அதீதன்.

பொருள்களனைத்தும், பதி பசு பாசமென்னும் மூன்றனுளடங்கும். அவற்றுள் பதிப்பொருள் ஏனைய பசுபாசப் பொருள்களோடு கலந்து நிற்பி னும் அப் பொருள்களுக்கு எட்டாதது என்பதுணர்த்தவும், கலக்கப்படும் பசுப்பொருள் கேவல சகல சுத்தமென்னும் நிலைவேறுபாட்டினையும், பாசப் பொருள் காரணரூபமா யொடுங்குதல் காரியரூபமாய் விரிதலென்னும் நிலை வேறுபாட்டினையும் பொருந்துமாறுபோல நிலைவேறுபடாதது என்பதுண ர்த்தவும் பொருள்களுக்குத்தூரியனாய் துளக்கமிலா தொன்றாகி யென் றார்.

ஒன்று - ஒருதன்மை.

ஆரியம் - செல்வம். சிவப்பொருள் செல்வமெனப்படுமென்பது 'திரு வே யென் செல்வமே' என்பது முதலிய திருவாக்குக்களானறிக. அதீதமா யினும் அநுபவிக்கப்படும் செல்வமாகும் என்பதுணர்த்த, ஆரியமாம் அநு பவமாம் என்றார். எனவே, பசுபோத முடையபெத்தர்க்கு அதீதமாயும், சிவபோதமுடைய முத்தர்க்கு அநுபவிக்கப் படுவதாயும் இருப்பது சிவப ரம்பொருள் என்றவாறாயிற்று.

அதுவென்று சிவபரம்பொருளைக் கூறுவது மகாவாக்கிய வழக்கு.

நேரியம் - அதிசூக்குமம்.

பதம் - முத்தி.

அது என்று சுட்டப்படும் சிவபரம் பொருளினிடத்து அன்புவைத் திருப்பவன் முத்தியை விரும்பவில்லையாயினும் நெறிமையினால் அதனைய டைவனென்றார். நெறிமை - முறைமை. முறைமையென்பது அன்பின் முறைமையைக் குறிக்கும். அன்பு, மந்ததாம், மந்தம், தீவிரம், தீவிர தரம் என நான்குவகைப்படும். அவற்றுள்,

மந்ததர அன்பு, கடவுட்பற்று ஒரு கூறும் உலகப்பற்று மூன்றுகூறும் உடையது.

மந்த அன்பு, கடவுட்பற்று இருகூறும் உலகப்பற்று இரு கூறும் உடையது.

தீவிர அன்பு, கடவுட்பற்று மூன்றுகூறும் உலகப்பற்று ஒருகூறும் உடையது.

தீவிரதர அன்பு, உலகப்பற்று ஒரு சிறிதுமின்றி கடவுட்பற்றுவிட்டு நீங்காதிருப்பது.

நான்காவதாகிய தீவிரதர அன்பையே நெறிமையினால் என்பது குறிக்கும். சிவபரம்பொருளினிடத்து விட்டு நீங்காத அன்புடைமையினால் முத்தியை விரும்பவில்லையாயினும் அதனையடைவனென்பதன் கருத்தை ஆராய்வாம்.

முத்தியென்பது விடுதல். விடப்படுவது பாசம். விடுவது பசு. இந்தப் பசு யாதானும் ஒன்றைப் பற்றி நிற்கும் தூலசித்து. ஆதலின் பாசத்தை விட்டுத் தனித்து நில்லாது பதியைப்பற்றி நிற்கும். ஆகவே, முத்தியென்பது பாசத்தைவிட்டுப் பதியைப்பற்றி நிற்றலென்பது பெறப்படும். படவே, பதியைப்பற்றி நிற்கும் நிலையில் பாசம் நீங்கி விட்டமையால் பாசத்தைவிட வேண்டுமென்று கருதவேண்டுவதில்லை. கருதவுமாட்டான். பாசநீக்கத்தில் சிவப்பேறும், சிவப்பேற்றில் பாசநீக்கமும் உடனிகழும். ஆயினும் சிவப்பேற்றினாலேயே பாசம் நீங்கவேண்டுதலின் ஒன்றையொன்று பற்றுதலென்னுங் குற்றமில்லை. இது, சூரியோதயத்தில் இருள்நீக்கமும், இருள் நீக்கத்தில் சூரியோதயமும் நிகழுமாயினும், சூரியோதயத்தினாலேயே இருள்நீங்குமாறு போலாம். முத்தியென்னுஞ் சொல்லிற்குரிய சிறந்த பொருள் பதியைப் பற்றி நிற்றலென்னும் இக்கருத்தினை விளக்குதற் பொருட்டே நேரியதாய் நித்தமாம்பதம் என்று இலக்கணவகையாற் கூறினார். இப்பதமே மேலே அதுவெனப் பொருள்வகையால் சுட்டப்பட்டது. அப்பொருளைவிட்டு நீங்காமையின் வேறாக முத்தியென்பதொன்றில்லையாகலின், கருதானேயாயிடினும் அடைவன் என்றார். இக்கருத்துப் பற்றியே *'கூடுமன்பினிற்கும் பிடலேயன்றி, வீடும்வேண்டா விறலின் விளங்கினார்.' என்றருளிச் செய்தனர் ஸ்ரீசேக்கிழார்நாயனார். (அ)

(அ - கை.) சிவபெருமானிடத்து அன்பு இடையறாது நிகழவேண்டுமாயின், தேகப்பற்று முற்றும் நீங்கவேண்டுமெனக் கூறுகின்றார்.

9. உருவருவாவ தியாதென் றுரைத் திடினகங் காரந்தான்
மருவியவடிவ தாகும் வடிவது மறவே விட்டால்
உருவிலாச் சத்தியத்தா லுலகெலாந் தோன்றலாலே
பொருவிலாச் சத்தித்தியானம் பொருந்திட வுரைத்ததன்றே.

(இ - ள்.) அகங்காரம் மருவிய வடிவுயாதென்று உரைத்திடின் உரு அரு ஆவதாகும் - (யானென்னும்) அகங்காரம் பொருந்துதற்குரிய வடிவம்

* பெரியபுராணம் திருக்கூட்டச் சிறப்பு. செ. அ.

யாதென்று கூறுமிடத்து தூலசூக்கும மென்னும் உடம்பாகும், வடிவதும் அறவேவிட்டால் உருவிலாச் சத்தி - அவ்வுடற்பற்று முற்றும் நீங்கினால், மாயாகாரிய வடிவத்தோடு தொடர்பில்லாத சத்திவடிவானசிவம் விளங்கித் (தோன்றும்) - உலகு எலாம் அத்தால் தோன்றலால் பொருவு இலாசத்தித் தியானம் பொருந்திடவுரைத்தது - சரம்அசரம் என்னும் இருகூற்றுப் பிரபஞ்சங்களும் அச் சிவபரம் பொருளினாலேயே தோன்றி நின்று ஒடுங்குதலால் ஒப்பில்லாத அச்சிவத்தியானமே செய்யத்தக்கதென்று நூல்கள் கூறிற்று எ - று.

(பொ - ரை.) யானென்னும் அகங்காரம் பொருந்துதற் குரியவடிவம் யாதென்று கூறுமிடத்து, தூலசூக்குமமென்னும் உடம்பாகும். அவ்வுடற் பற்றுமுற்றும் நீங்கினால், மாயாகாரிய வடிவத்தோடு தொடர்பில்லாத சத்திவடிவான சிவம் விளங்கித்தோன்றும். சரம் அசரமென்னும் இருகூற்றுப் பிரபஞ்சங்களும் அச்சிவபரம் பொருளினாலேயே தோன்றிநின்று ஒடுங்குதலால் ஒப்பில்லாத அச்சிவத்தியானமே செய்யத்தக்கதென்று நூல்கள் கூறிற்று எ - று.

(க - ரை.) உடற்பற்று முற்றும்நீங்கினால் சிவம் விளங்கித்தோன்றும். தோன்றவே, அச்சிவத்தினிடத்து அன்பு இடையறாது நிகழும் என்பதாம்.

அகங்காரந்தான் என்றவிடத்து தான் - அசை. வடிவது என்றவிடத்து அது பகுதிப்பொருள் விகுதி. சத்தியென்பது சத்திவடிவான சிவத்தைக் குறித்தது. அதனாலென்பது அத்தாலென நின்றது. *பெற்றத்தால் என்புழிப்போல.

தோன்றல் என்பது †"ஒருமொழி ஒழிதன்னினங்கொளற்குரித்தே" என்னும் விதிப்படி நிற்றல் ஒடுங்குதல் களையுந்தழுவும்.

அன்றே - அசை.

அகங்காரம் மருவியவடிவயாது என்னும் அநுவாதத்தால், வடிவம் பற்றி அகங்காரம் நிகழுமென்பது பெறப்பட்டது. உயிருக்குப்பற்றப்படும் பொருள் உடலும் சிவமுமாம். அவற்றுள் உடலைப்பற்றி நிற்குங்காலத்து நானே முதலென்னும் அகங்காரந் தோன்றும். சிவனைப்பற்றி நிற்குங்காலத்து நானெனும் முனைப்புத் தோன்றுமாறில்லை. இக் கருத்துப்பற்றியே ¶ "நானென ஒன்றில்லென்று" எனச் சிவஞானபோதங்கூறிற்று.

சிவம் தன்னோடு எக்காலத்தும் பிரிப்பின்றி நிற்பினும் உடற்பற்று உள்ளவரையும் விளங்கித்தோன்றாது. உடற்பற்று அறவே நீங்கினால்

* திருக்குறள் சுற்றந்தழால். ௭.

† நன்னூல். சூ - ம். ௬௫௮.

¶ சிவஞானபோதம். ௧௦-ம் சூ-ம். ௧ம் அதி

விளங்கித்தோன்றும். இக்கருத்துப்பற்றியே 0"யானெனதென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்குயர்ந்த வுலகம் புகும்" என்றனர் தேவர். (கூ)

(அ - கை.) தேகப்பற்று முற்றும் நீங்கிச் சிவத்தைப்பற்றி நிற்குங் காலத்துச் சிவம்வாயிலாய் ஆன்மாவினிடத்து நிகழும் சிவஞானமே முத்திக்கு வித்தெனக்கூறுகின்றார்.

10. யானெனு மதனைநீக்கி யேகமாய் நின்றஞானம்
ஆனவவ் வொளியாய்த் தோன்று மதுமுத்திவித்துமாகித்
தேனமர் கரியகூந்தற் செய்யவாய் பரந்துநீண்ட
மானமர் விழியாய்மேலாம் யோகவத் தகமுமாமால்.

(இ - ள்.) தேன் அமர் கரிய கூந்தல் செய்யவாய் பரந்துநீண்ட மான் அமர்விழியாய் - வண்டுகள் தங்கிய கரியகூந்தலையும், செவ்வாம்பல் போன்ற வாயினையும், விரிந்து நீண்ட மான்போலும் பார்வையினையும் உடையவளே, யான் எனும் அதனைநீக்கி ஏகமாய் நின்றஞானம் - (ஆன்மா) நான் ஒருமுதல் என்றெண்ணுதற்கு ஏதுவாய் நிற்கும் உடற்பற்றை நீக்கிச் சிவத்தைச் சார்ந்து சிவமாய்நிற்குங்காலத்து நிகழும் சிவஞானம், ஆன அவ்வொளியாய்த் தோன்றும் - சிவமாகிய அவ்வொளிபோலத் தோன்றும், அது முத்திவித்தும் ஆகிமேலாம் யோகவத்தகமும் ஆம் - அந்தச் சிவஞானம் முத்தியை உண்டுபண்ணுவதாயும் சிவனோடுகலந்து நிற்குந் தொழிலினையுடையதாயும் ஆகும் எ - று.

(பொ - ரை.) வண்டுகள்தங்கிய கரிய கூந்தலையும், செவ்வாம்பல் போன்றவாயினையும், விரிந்து நீண்ட மான்போலும் பார்வையினையும் உடையவளே (ஆன்மா) நான் ஒருமுதலென்றெண்ணுதற்கு ஏதுவாய் நின்றஉடற்பற்றைநீக்கிச் சிவத்தைச்சார்ந்து சிவமாய் நிற்குங்காலத்து நிகழும் சிவஞானம், சிவமாகிய அவ்வொளிபோலத் தோன்றும். அந்தச்சிவஞானம் முத்தியை உண்டுபண்ணுவதாயும், சிவனோடுகலந்து நிற்குந் தொழிலினையுடையதாயும் ஆகும் எ - று.

(க - ரை.) சிவஞானம் முத்திக்கு வித்தாயும் சிவயோகத்தொழிலினையுடையதாயும் விளங்கும் என்பதாம்.

ஆல் - அசை.

ஆன்மாவினிடத்து நிகழும் ஞானம், பாசஞானம் பசுஞானம் பதிஞானமென முத்திறப்படும்.

பாசஞானமாவது - தேகேந்திரிய அந்தக்கரணங்களின் வாயிலாக ஆன்மாவினிடத்து நிகழும் ஞானம்.

---

0 திருக்குறள். துறவு. செ. சு.

பசுஞானமாவது - தற்போதம்வாயிலாக நான் ஒருமுதலென்று ஆன்மா வினிடத்து நிகழும் ஞானம்.

பதிஞானம், ஆராய்ச்சிஞானம் அநுபவஞானமென இருவகைப்படும். அவற்றுள், ஆராய்ச்சி ஞானமாவது - தேகம்தானன்று சிவனோடு பிரிப் பின்றி நிற்றலேதன் னுண்மையென நூல்வழியாலும் குருவினருளுப தேசத் தாலும் அறிந்தவிடத்து, தேகப்பற்று நீங்கிச் சிவத்தைப்பற்றி நிற்கும் ஞானம். இந்நிலையில் சிவம்விளங்கித் தோன்றுதலில்லை. ஆயினும் விள ங்கித் தோன்றுதற்பொருட்டு அச்சிவப்பொருளையே சிந்தித்துக்கொண் டிருத்தலின், அச்சிந்தனை சிவஞானமெனப்பட்டது.

அநுபவஞானமாவது - அச்சிந்தனையால் சிவம்விளங்கித்தோன்ற அத னோடு இரண்டறக்கலந்துநின்றுதான் சிவமாய்விளங்கும் ஞானம்.

இந்த அநுபவஞானத்தை உண்டுபண்ணுவதும் சிவனோடுகலந்து நிற் கச் செய்வதுமாகிய ஆராய்ச்சிஞானமே ஏகமாய் நின்றஞானமென இச்செய் யுளில் கூறப்பட்டது.

எவற்றிற்குங் கருத்தாவாயிருக்குந்தன்மை சிவனொருவனுக்கே உண்டு; ஏனையோருக்கில்லையென்பது தோன்ற சிவம் ஏகமெனப்பட்டது. * "ஒன் றென்ற தொன்றேகா ணொன்றேபதி" என்னுஞ் சுருதி இக்கருத்தினை வலி யுறுத்தும்.

நின்றஞானம் என்பது நிற்குங்காலத்து நிகழும்ஞானம் என்னும் பொ ருள்தோன்றநின்றது. 'ஆறுசென்றவெயர்' என்பதுபோல. ஆறு - வழி. வெயர் - வெயர்வை.

சிவனைப்பற்றி நிற்குங்காலத்து நிகழும் சிவஞானம், சிவம்போலப் பிறிதொன்றனைப் பற்றாது விளங்கும் என்பது உணர்த்துதற்கு ஆன அவ் வொளியாய்த் தோன்றுமென்றார்.

ஆய் - உவமவாசகம். ¶ மாடாவேனோ என்றாற்போல.

ஞானம் மூவகைப்படுமென்பதற்கு உதாரணம். பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே நேசமொடு முள்ளத்தே நாடி. (சிவஞானசித்தியார். சுபக். சூ - ம். செ. க.) (கo)

(அ - கை.) முத்தியை விரும்புகின்றவன் சிவஞானமாகிய சிவயோகத் தைப் பயிலவேண்டுமன்றி, நாடி முதலியவற்றைப்பற்றிச் செய்யுங் கரும யோகத்தைப் பயிலக்கூடாதெனக் கூறுகின்றார்.

11. சக்கரநாடி சான்றோர் வழித்தெய்வ ரூபமூல
அக்கர மண்டலங்கண் ஞானம்போ லழகின்றாகும்
மக்கடோய் மாயாவிச்சை மந்திரம் பிராணாயாமம்
தொக்கசீர் ஞானஞ்சேரத் தொடங்குவார் தொடங்கலாகா.

---

* சிவஞானபோதம் உ. சூ - ம். க. அதி. வெ. உ.
¶ திருவாசகம். கோயில் மூத்ததிருப்பதிகம் செ. எ.

(இ - ள்.) சக்கரம் - மூலாதார முதலாகிய ஆறாதார சக்கரங்களும் நாடி - இடைகலை பிங்கலை சுழுமுனையென்னும் நாடிகளும், தெய்வரூபம் - ஆதாரங்களில் வசிக்குந் தெய்வங்களும் அவற்றின் வடிவங்களும், மூல அக்கரம் - பீசாக்கரங்களும், மண்டலங்கள் - சோமசூரியாக்கினி மண்டலங்களும் ஆகிய இவற்றின் தியானம், சான்றோர் வழிஞானம் போல் அழகுஇன்றுஆகும் - அறிவுடையார் பயிலும்ஞானம்போலச் சிறப்புடையதன்று, சீர்தொக்கஞானஞ் சேரத்தொடங்குவார் - சிறப்பு நிறைந்தசிவஞானத்தை அடைய முயலுவோர், மக்கள் தோய்மாயா விச்சை மந்திரம் பிராணயாமம் தொடங்கலாகா - அபக்குவராயுள்ள மனிதர்கள் பயிலுகின்ற மாயாவித்தைக்குரிய மந்திரம் பிராணயாமங்களைப் பயிலுதல் கூடாது எ - று.

(பொ - ரை.) மூலாதார முதலாகிய ஆறாதார சக்கரங்களும், இடைகலை பிங்கலை சுழுமுனையென்னும் நாடிகளும், ஆதாரங்களில் வசிக்குந் தெய்வங்களும் அவற்றின் வடிவங்களும், பீசாக்கரங்களும், சோமசூரியாக்கினி மண்டலங்களும் ஆகிய இவற்றின் தியானம், அறிவுடையார் பயிலும் ஞானம்போலச் சிறப்புடையதன்று. சிறப்புநிறைந்த சிவஞானத்தை அடையமுயலுவோர், அபக்குவராயுள்ள மனிதர்கள் பயிலுகின்ற மாயாவித்தைக்குரிய மந்திரம் பிராணயாமங்களைப் பயிலுதல்கூடாது எ - று.

(க - ரை.) ஞானயோகத்தை அநுட்டிப்பவர் கருமயோகத்தை அநுட்டித்தல்கூடாது என்பதாம்.

சான்றோரெனமுன்னர்க்கூறி மக்களெனப் பின்னர்க்கூறினமையால், சான்றோரல்லாத அபக்குவராயுள்ள மனிதரென்பது பெறப்பட்டது - மூலம் அக்கரம் எனப்பாடங்கொள்ளினும் மூலமாகிய அக்கரம் எனப்பொருள்பட்டு பீசாக்கரத்தையே குறிக்கும்.

ஞானயோகத்துக்கு அங்கமாயுள்ள மந்திரம் பிராணயாமங்கள் பயிலத்தக்கனஎன்பது தோன்ற, மாயாவிச்சைமந்திரம் பிராணயாமம் தொடங்கலாகா என்றார். (கக)

(அ - கை.) சிவஞானத்தால் சிவமாய்விளங்கும் சீவன்முத்தர்க்குச் சிந்தனைபுறத்துச் செல்லுதல் கூடாதெனக்கூறுகின்றார்.

12. மந்திரஞ் செபந்தியானம் பூசனைவணக்கம் வேண்டா
அந்தமி லாதமுத்திக் குபாயமே யறியவேண்டும்
சிந்தனை புறமேசெல்லிற் றுயரமே திரியமீட்கின்
பந்தமாந் துன்பநீங்கிப் பரமான வின்பஞ்சேர்வார்.

(இ - ள்.) மந்திரம் செபம் தியானம் பூசனை வணக்கம் வேண்டா - (சீவன்முத்தர்) மந்திரங்களைச் செபித்தலும், மூர்த்திகளைத் தியானித்தலும் பூசைசெய்தலும், வணங்குதலும் ஆகிய தொழில்களைச்செய்ய வேண்டாம், அந்தம் இலாத முத்திக்கு உபாயமே அறியவேண்டும் - கெடுதலில்லாத பரமுத்திக்குரிய சாதனத்தையே பயிலவேண்டும், சிந்தனைபுறமே செல்லில் துயரம் - அறிவுபுறத்துச் செல்லின் துன்பமே உண்டாம், திரிய மீட்கின் பந்தமாந் துன்பம்நீங்கி பரமான இன்பம் சேர்வர் - அகத்துச் செல்லும்படி திருப்பின் கட்டுப்படுதலாகிய துன்பத்தினின்றும் நீங்கி மேலான இன்பத்தை யநுபவிப்பர் எ - று.

(பொ - ரை.) சீவன்முத்தர், மந்திரங்களைச் செபித்தலும் மூர்த்திகளைத் தியானித்தலும் பூசைசெய்தலும் வணங்குதலுமாகிய தொழில்களைச் செய்யவேண்டாம். கெடுதலில்லாத பரமுத்திக்குரிய சாதனத்தையே பயிலவேண்டும், அறிவுபுறத்துச் செல்லின் துன்பமேஉண்டாம். அகத்துச் செல்லும்படிதிருப்பின் கட்டுப்படுதலாகிய துன்பத்தினின்றும் நீங்கிமேலான இன்பத்தை யநுபவிப்பர் எ - று.

(க - ரை.) சீவன்முத்தர் அறிவு, புறத்து விடயங்களிற் செல்லாது அகத்துநிகழும் சிவாநுபவத்திலேயே அழுந்தவேண்டும் என்பதாம்.

சேர்வார் என்னும் பயனிலையால், சீவன் முத்தரென்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது.

மேலைச்செய்யுளில் மாயாவிச்சை மந்திரம் பிராணாயாமம் என்று கூறப்பட்டதனையே, சிந்தனைபுறமே செல்லிற்றுயரமே என்பதறிவித்தற்கு அநுவாதமாக எடுத்துக்கொண்டார். சிவமந்திரத்தைச் செபித்தலும் சிவத்தியானஞ் செய்தலும் சிவபூசைசெய்தலும் சிவனைவணங்கலுமாகிய இவை முத்திக்குச்சாதனமாகுமே யன்றி பந்தத்தைச் செய்யா. சீவன்முத்தன் சிவமேயாயிருக்கும் நிட்டையினின்று நீங்கின், தனக்குச் சிவாநுபூதியை உண்டுபண்ணியமுடிவான சாதனத்தை மீண்டும் பயிலுதலோடு சிவாநுபூதிச் செல்வராகிய சிவனடியாரையும் சிவாலயத்தையும் சிவனெனவே கண்டு வழிபட வேண்டும். இவ்வழிபாடு சிவனையே சிந்திக்கச் செய்து சிவாநுபவத்தில் நிலைக்கச் செய்தலின், இச் சிந்தனை அகத்து நிகழ்தலோடொக்குமன்றிப் புறத்துச் செல்லுதலாக ஆகாது. * "செம்மலர் நோன்றாள் சேரலொட்டா, அம்மலங்கழீஇ அன்பரொடு மரீஇ, மாலறநேய மலிந்தவர் வேடமும், ஆலயந் தானும் அரனெனத் தொழுமே." என்னும் சுருதி இக் கருத்தினை வலியுறுத்துமாறு காண்க. (கஉ)

* சிவஞானபோதம். கஉ-ம் சூ - ம்.

(அ - கை.) சீவன்முத்தனுடைய அறிவு அகம்புறமென்னும் பேதமின்றிச் சிவமாய் விளங்குமெனக்கூறுகின்றார்.

13. புறனகங் கீழ்மேல்பக்கம் புணர்வதோர் பொருளுமில்லைத்
திறனுடை யுருவமெல்லாந் தானாகித் தேக மின்றாய்
அறன்முறை யடங்கு ஞான யோகினா லறியப்பட்ட
விறன்மலி ஞானாநந்த மேன்மையாய் விளங்காநிற்கும்.

(இ - ள்.) புறன் அகம் கீழ்மேல் பக்கம்(இல்லை)புணர்வதோர் பொருளும் இல்லை - சீவன் முத்தனுக்குப் புறமென்றும் உள்ளென்றும் கீழென்றும் மேலென்றும் பக்கமென்றும் பேதம்நிகழ்வதில்லை, அவ்விடங்களில் பொருந்தியிருக்கும் பொருள்களின் தோற்றமும் நிகழ்வதில்லை, திறனுடை உருவம் எல்லாம் தானாகி தேகம் இன்றாய் - நிலைபெற்ற பொருள்களைத்தும் சித்துருபமான தன் சொரூபமேயாய்த் தோன்றிச் சரீரத்தோற்றம் இல்லையாகி, அறன்முறை அடக்கும் ஞானயோகினால் அறியப்பட்டவிறல் மலி ஞான ஆனந்தம் - பசுபாசங்களோடு கூடாது பதியில் அடங்கிநிற்றலால் நிகழும் ஞானயோகத்தால் அறியப்பட்ட வெற்றி மிகுந்த ஞானானந்தமே, மேன்மையாய் விளங்கா நிற்கும் - மேம்பட்டு விளங்கும் எ - று.

(பொ - ரை.) சீவன்முத்தனுக்குப் புறமென்றும் உள்ளென்றும் கீழென்றும் மேலென்றும் பேதம் நிகழ்வதில்லை; அவ்விடங்களில் பொருந்தியிருக்கும் பொருள்களின் தோற்றமும் நிகழ்வதில்லை. நிலைபெற்ற பொருள்களைத்தும் சித்துருபமான தன் சொரூபமேயாய்த் தோன்றிச் சரீரத்தோற்றம் இல்லையாகி, பசுபாசங்களோடு கூடாது பதியில் அடங்கி நிற்றலால் நிகழும் ஞானயோகத்தால் அறியப்பட்டவெற்றி மிகுந்த ஞானானந்தமே மேம்பட்டு விளங்கும் எ - று.

(க - ரை.) சீவன்முத்தனுக்கு உலகத்தோற்றம் உடற்றோற்ற மொன்றுமின்றிச் சிவம் ஒன்றேதோன்றும் என்பதாம்.

தானாகித் தேகமின்றாய் விளங்காநிற்கும் என முடித்துக்கொள்க.

தேகம் தானாகத்தோன்றுங் காலத்துத்தான் புறம் முதலிய இடபேதங்களும் அவ்விடங்களில் உள்ளபொருள்களுந் தோன்றும். தேகந்தோன்றாது தான் சிவமாய்த் தோன்றுங்காலத்து இடபேதங்களும் பொருட்பேதங்களும் தோன்றாது சிவமொன்றே மேம்பட்டுத் தோன்றுமென்பது இச்செய்யுளாற் பெறப்பட்ட பொருளாகும்.

கருமயோகம் உலகானுபவத்திற்குக் காரணமாய் அடங்காமையின்பாற்படும். ஞானயோகம் சிவானுபவத்திற்குக் காரணமாய் தானென்றொருமுதல் இல்லையென்னும்படி அடங்குதலின் பாற்படும். இக் கருத்துத் தோன்ற அறன்முறை யடங்குஞான யோகம் என்றார். அறன்முறையடங்குதல் - பசுபாசங்களோடு கூடாது பதியில் அடங்குதல். (கங)

(அ - கை.) ஆன்மா சார்ந்ததன் வண்ணமாகுந் தன்மையுடையது. ஆதலின் சிவனைச்சார்ந்து சிவமாய் நிற்றல் முறையெனக் கூறுகின்றார்.

14. எந்த வாருயிர் யாதொர் பொருளினைச்
சிந்தையாற் பற்றிக் காரியஞ் செய்திடின்
அந்த யோனிய தாமென் றறிவினால்
பந்த மில்பொருள் பற்றுத றக்கதே.

(இ - ள்.) எந்த ஆருயிர் - எந்தமக்களுயிரும், யாதொர் பொருளினை சிந்தையால் பற்றி காரியம்செய்திடின் - எந்தப்பொருளையாவது மனதைக் கருவியாகக்கொண்டு சார்ந்து நின்று தொழில் செய்யுமாயின், அந்தயோனி யது ஆம் - அந்தப்பொருளின் தன்மையே தன்றன்மையாகக் கொண்டுவி ளங்கும், என்று - இவ்வாறு கூறும் உண்மையினை யுணர்ந்து, பந்தம் இல் பொருள் அறிவினால் பற்றுதல் தக்கது - அநாதி முத்தசித்துருவாகிய பரம் பொருளை அறிவினால் அறிந்து அதில் அழுந்துதல் முறையாகும் எ - று.

(பொ - ரை.) எந்தமக்களுயிரும், எந்தப்பொருளையாவது மனதைக் கருவியாகக் கொண்டு சார்ந்து நின்று தொழில் செய்யுமாயின், அந்தப்பொ ருளின் தன்மையே தன்றன்மையாகக் கொண்டு விளங்கும். இவ்வாறு கூ றும் உண்மையினை யுணர்ந்து அநாதிமுத்த சித்துருவாகிய பரம்பொருளை அறிவினாலறிந்து அதிலழுந்துதல் முறையாகும் எ - று.

(க - ரை.) சிவஞானத்தால் சிவனைச் சார்ந்து சிவமாய் நிற்றலே ஆன் மாசெய்யத்தக்கது என்பதாம்.

ஆருயிரென்றதனால் மக்களுயிரென்பது பெறப்பட்டது. எல்லாவுயிர் கட்கும் சார்ந்ததன் வண்ணமாந்தன்மை உண்டெனினும், அவ்வுண்மையி னைப் பகுத்துணருந்தன்மை மக்களுயிருக்கன்றி ஏனைய உயிர்கட்குக் கிடை யாது. தாவரம் முதலிய ஐவகைப் பிறவிகளை அடைந்திருக்கும் உயிர்கட் குப் பகுத்துணர்வு கிடையா தென்பதுபொருந்தும். தேவர்களுக்கும் இல் லையென்றல் பொருந்துமோவெனில், கூறுதும். தேவர்கட்கு இன்பாநுபவ மொன்றேயன்றி வேறுவகையான அறிவு நிகழ்கிறதில்லை. ஏகதேசத்தில் அந்தச் சுவர்க்கஇன்பமும் துன்பமெனத் தோன்றினும், அவ்வுலகத்திலிருந் துகொண்டே அதனைக் கடத்தற்கான செயலைச் செய்யமுடியாது. ஆதலி னாற்றான் சிவனை இம்மண்ணுலகில் வந்து தேவர்கள் பூசித்தன ரென்று புராணங்கள் கூறுகின்றன. இக்கருத்தினை வலியுறுத் நம் சிவஞானசித்தித் திருவிருத்தம் வருமாறு:—

மானுடப் பிறவிதானும் வகுத்தது மனவாக்காயம்
ஆனிடத் தைந் துமாடு மரன்பணிக் காகவன்றே

வானிடத் தவருமண்மேல் வந்தரன் றனையர்ச்சிப்பார்
ஊனெடுத் துழலுமூம மொன்றையு முணரா ரந்தோ. என்பது.

உயிர்க்குச் சார்ந்ததன் வண்ணமாதல் உண்டென்னின், பரிணமிக்குந் தன்மை யுண்டெனப்படும். படவே, சடப்பொருளெனப்பட்டுக் குற்றமாம். கடம் முதலியனவாய்ப் பரிணமிக்குந் தன்மை மண்முதலிய சடப்பொருள்களுக்கிருத்தல் காணப்படுகின்றது. உயிரோ சித்துப் பொருள். அதற்குப் பரிணாமங் கூறுதல் பொருந்தாது. ஆதலின், சார்ந்ததன் வண்ணமாதல் உயிருக்குண்டென்றல் எவ்வாறு பொருந்துமெனின், கூறுதும். பரிணாம மென்பது ஒருபொருள் பிறிதொரு பொருளாக மாறுதல். பால் தயிராதல் போலும். மண் கடமாதலும், நூல் ஆடையாதலும் இவைபோல்வன பிறவும் பரிணாமமே. உயிர், சார்ந்தபொருளாக மாறிவிடுகிறதில்லை. சார்ந்த பொருளின் றன்மை உயிரின் அறிவில் விளங்கித் தோன்ற உயிர் அத்தன்மையுடையதாகத்தோன்றலே சார்ந்ததன் வண்ணமாதல். பளிங்குபோலும். அக்கினியாதானும் ஒன்றைப்பற்றி நிற்றலேயன்றித் தனித்துநில்லாத வாறுபோல உயிர்யாதானும்ஒன்றைப்பற்றி நிற்குமேயன்றித்தனித் துநிற்றலில்லை. ஆகையால் மலத்தைப்பற்றி நிற்குங்காலத்து மலத்தின் றன்மையாகிய அறியாமை உடையதாய் விளங்கும். கலைமுதலிய கருவிகளைப் பற்றிநிற்குங்காலத்து அவற்றின் றன்மையாகிய ஏகதேச அறிவுடையதாய் விளங்கும். ஏகதேசஅறிவு - ஒன்றனையறியும்பொழுது பிறிதொன்றனை அறியாமை. மலத்தினையுங் கருவிகளையும் நீங்கிச் சிவனைப்பற்றிநிற்குங் காலத்துச் சிவத்தின் றன்மையாகிய முற்றறிவுக் தன்மையுடையதாய் விளங்கும். இவ்வளவேயன்றிச் சார்ந்தபொருளாக உயிர்மாறிவிடுகிறதில்லை. உயிரினறிவு மாறுகின்றமையால் உயிர் மாறுகின்றதென்று கொள்ளுதல் கூடாதோ எனின், கூடாது; உயிரினறிவுக்குச் சார்ந்த தன்றன்மை யாதலே யியல்பாதலின் மாறின தென்றல் பொருந்தாமையின். பளிங்கினொளிக்குப் பற்றப்படும் பொருளின்றன்மையாய் விளங்குதல் இயல்பாதல் போலும். அவ்வாறாயினும், பற்றப்படும் பொருளின்றன்மையாய் விளங்குதல் உண்மையாகாதெனப் பட்டுச் சிவனைப்பற்றிச் சிவத்தின்றன்மை தன்னிடத்து விளங்கச் சிவமாய் நிற்றல் உண்மையாகாதேயெனின், அறியாது வினயினை. எவ்வாறெனில், கூறுதும். எக்காலத்தும் பிரிக்கமுடியாதிருப்பது உண்மை. ஒருகாலத்தில் பிரிக்கப்படுவது உபசாரம். நீரினிடத்துத் தட்பம் உண்மை. வெப்பம் உபசாரம். உயிருக்கு மலமும் கருவிகளும் பிரிக்கப்படுவன. சிவம் பெத்த முத்தியிரண்டினும் பிரிக்கப்படாதது. மலமறைப்பால் அதுவிளங்கித் தோன்றுதலில்லை. மலம் நீங்கியபின்விளங்கித் தோன்றும். விளங்கித்தோன்றியபின் அதுவிட்டு நீங்குதலில்லை. மலம் சடசாதியாகிய வேற்றுச் சாதியாகையால் நீங்கும். சிவம் தன் சாதியாகிய சித்துச் சாதியாகை

யால் நீங்குதலில்லை. நீங்காமையால் சிவத்தைச் சார்ந்து சிவமாய்நிற்றல் உண்மையெனப் படுமன்றி உபசார மாகாதென்க. ஆயினும், பளிங்கிற் றோன்றிய மலரின் நிறம் மணத்தைச் செய்யாத வாறுபோல உயிரிற்றோன் றிய சிவத்தின்றன்மை பஞ்சகிருத்தியஞ் செய்யுமா றில்லை. எனையவெல்லாம் சருவஞானோத்தா விருத்தியுட் கூறினுமாதலின் ஆண்டுக்காண்க. (கச)

(அ - கை.) சிவனைச் சார்ந்துநிற்கும் சீவன்முத்தனுக்குக் கன்மபலன் முதலியன இல்லையெனக்கூறுகின்றார்.

15. கன்மபலமேது மில்லைச் சுபாவமே காணுங்கால்
தொன்மையுல குயிரில்லைத் தோன்றுவதெல் லாமசத்து
நன்மையினைத் தோற்றுவித்துப் பற்றிலதாய் நணுகரிய
தென்னவறிந் தானுலகு மிலதாகிச் சுத்தனுமாம்.

(இ - ள்.) சுபாவமே காணுங்கால் - உயிரின் உண்மைத் தன்மையை அறியுமிடத்து, கன்மபலம் ஏதும் இல்லை - (அவனுக்கு) பிராரத்த வினை யின் பயனாக அநுபவிக்கத்தக்கது ஒன்றுமில்லை, தொன்மைஉலகு உயிர் இல்லை - (அஃதில்லாமையால்) பழைமையான உலகத்தோற்றமும் நா னென்னுந் தற்போதமும்இல்லை, தோன்றுவது எல்லாம் அசத்து - வாசனை பற்றித்தோன்றுமாயின் தோன்றுகின்ற பொருள்களனைத்தும் நிலைபெறின் றிநீங்கும், நன்மையினைத் தோற்றுவித்து - (நீங்கவே) சிவத்தினைத் தோற் றுவித்து, பற்று இலதாய் - சுயம் பிரகாசமாய், நணுகஅரியது என்ன அறிந்தான் - பொருந்துதற்கு அரியது என்னும்படி (தன்னையறியவரும்) அவ்வாறு (தன்னை) அறிந்தவன், உலகும் இலதாகி சுத்தனும் ஆம் - பாசப் பற்றும்நீங்க நிர்மலனுமாவன் எ - று.

(பொ - ரை.) உயிரின் உண்மைத் தன்மையை அறியுமிடத்து, அவ னுக்குப் பிராரத்த வினையின்பயனாக அநுபவிக்கத் தக்கது ஒன்றுமில்லை. அஃதில்லாமையால் பழைமையான உலகத் தோற்றமும் நானென்னுந் தற்போதமும்இல்லை. வாசனைபற்றி உலகமும் உடலுந் தோன்றுமாயின், தோன்றுகின்ற பொருள்களனைத்தும் நிலைபேறின்றிநீங்கும். நீங்கவே, சிவத்தினைத் தோற்றுவித்துச் சுயம்பிரகாசமாய்ப் பொருந்துதற்கு அரியது என்னும்படி தன்னையறியவரும். அவ்வாறு தன்னை அறிந்தவன், பாசப்பற் றும் நீங்க நிர்மலனும் ஆவன் எ - று.

(க - ரை.) உயிரின் உண்மைத் தன்மையை அறிந்த சீவன்முத்தன், சிவத்தோற்றம் ஒன்றேகண்டு யான் எனது என்னும் பற்றின்றிச் சிவன் போலநிர்மலனாய் விளங்குவன் என்பதாம்.

ஒவ்வொரு பொருளுக்கும் தடத்தநிலை சொரூபநிலையென இருநிலை களுண்டு. பிறபொருளோடுகூடிநிற்கும் நிலைதடத்தம். தனித்துநிற்கும் நிலை

சொரூபம். மலத்தோடுங் கருவிகளோடுங் கூடிநிற்கும் நிலைஉயிருக்குத்தடத் தம். அவற்ரொடுகூடாது தனித்திருக்கும்நிலை உயிருக்குச் சொரூபம். உயிர் யாதானும் ஒன்றைச் சார்ந்து நிற்குமன்றித் தனித்து நிற்றல் எக்காலத்து மில்லையாகையால், மலத்தொடுங் கருவிகளொடுங்கூடாது தனித்தநிலை யென்பது சிவனொடுகூடி நிற்றலேயாகும். அதாவது, சிவனொடுபிரிப் பின்றிநிற்றல் விளங்கித்தோன்ற சிவமாய் நிற்றலாகும். ஆகவே, நான் யார் என்று தன்உண்மையை உள்முகமாகத் திரும்பிநோக்குவானுக்கு நானென ஒருபொருள் தனித்துத் தோன்றுமாறின்றிச் சிவமே மேம்பட்டுத் தோன்றும். அப்பொழுது சார்ந்ததன் வண்ணமாந்தன்மையினை உடைய உயிரினிடத்துச் சிவத்தின்றன்மையாகிய முற்றறிவுமுதலிய குணங்கள் விளங்கித் தோன்றும். தோன்றவே, உயிர்அநுபவிக்க வேண்டியதாய் நிய மிக்கப்பட்டுள்ள புண்ணிய பாவப் பயன்கள்வந்து தாக்குதலில்லை. * 'முன் னுடம்பின்வினை யிந்தவுடல் விளைக்கும்.' என்னும் திருவாக்கால் வினைப் பயனை உடம்போடுகூடி உயிர்அநுபவிக்கவேண்டு மென்பது பெறப்படுமா யினும் தன் உண்மையைநோக்கும் உயிர்க்கு உடம்புதோன்று மாறில்லையா கையால், உடம்பால் அநுபவிக்கப்படுவதொன்றும் உயிரைவந்து தாக்குத லில்லை. எனவே, நியதி மாறுபடுதலின்றி உடம்பைத் தாக்கி உடலூழாய்க் கழியுமென அறிந்துகொள்க. இவ்வுண்மை, திருநாவுக்கரசு சுவாமிகளுக் குத் தீயஅமணர்செய்த கொடுமையனைத்தும் உயிரைத் தாக்காது உடலூ ழாய்க்கழிந்தமையின் வைத்தறியப்படும். இக்கருத்துத்தோன்ற 'கன்மபலம் ஏதுமில்லை' எனப்பட்டது.

கன்மபலனை யநுபவித்தற்கு உடம்பும் வேண்டும்; உலகப்பொருள் களும் வேண்டும். உடம்பிருந்து உலகப்பொருளில்லாத விடத்தும், உல கப்பொருளிருந்து உடம்பில்லாத விடத்தும் கன்மபலனை அநுபவித்தல் கூடாது. ஆகையால் கன்மபலனை அநுபவித்தலில்லாத சிவாநுபவநிலையில் உலகமுந்தோன்றாது உடலுந்தோன்றாதென்பது உணர்த்துதற்கு உலகு யிரில்லை என்றார். உயிருக்கு இருத்தலென்பது நான் என்னுந்தற்போத மே. அது, உடல்பற்றி நிகழ்வது ஆதலின் உயிரில்லை யென்றதனால் உடம் பில்லை யென்பது பெறப்பட்டது.

உடலும் உலகுந் தொன்று தொட்டுத் தொடர்ந்து வருகின்றமைபற்றி தொன்மை யென்னும் அடைமொழிசேர்க்கப்பட்டது. சிவாநுபவ நிலையில் நிற்கும் உயிருக்குப் பழமையான வாசனையால் உலகமும் உடலும் சிலசமயந் தோன்றவரினும், சிவாநுபவத்தின் உறைப்பால் அத்தோற்றம் நிலைபேறின் றிக் கெட்டொழியுமென்பது தோன்ற 'நன்மையினைத் தோற்றுவித்து'

---

* சிவஞான சித்தியார்-உ. ம். சூ-ம். செ. கo.

என்பதனை, 'தோன்றுவதெல்லாம் அசத்து' என்றதனைத் தொடரவைத்தார். அசத்தென்பது நிலையாமையைக்குறித்தது. அசத்தாக என்னும் பொருள்பட ஆக்கச்சொல்வருவித்துரைக்க.

நன்மையென்பது குணம். அதுயாதாலும் ஒருகுணியைப் பற்றிநின்று பிறர்க்குப்பயன்படும். குணியென்பதுபொருள். உயிர்ப்பொருள் உயிரல்லாத பொருள்களிடத்துக்காணப்படும் நன்மைநிலைத்திருப்பதில்லை. அம்மட்டோ தீமைகலவாது தனித்திருப்பதுமில்லை. இவ்வாறிருத்தற்குக்காரணம் உயிர்ப் பொருள்மலத்தோடு கூடியிருத்தலும் உயிரல்லாதபொருள் சடமாயிருத்தலுமேயாம். ஆகவே, இயல்பாகவே மலத்தொடுகூடாதசிவம் ஒன்றுதான் தீமை கலவாதநன்மையினை எக்காலத்தும்உடையது. இக்கருத்துப்பற்றியே, 'நன்றுடையானைத் தீயதில்லானை' என்றருளிச்செய்தனர் திருஞானசம்பந்த சுவாமிகளும். நன்மையென்பது அதனையுடைய சிவத்தைக் குறித்தது. 'சோதியேசுடரே' என்பதுபோல. (திருவாசகம்.)

பற்றிலது என்பது பிறிதொன்றின் துணைவேண்டாது தானே பிரகாசித்தலைக்குறித்தது. சிவத்தைப்பற்றிநிற்கும்உயிர், சிவம்போலப் பிரகாசிக்குமென்பதுகருத்து.

நணுகரிய என்றவிடத்து நணுக அரியஎன்னும் பொருள்பட அகரந் தொக்குநின்றது.

அறிந்தான் என்னும் அநுவாதத்தால் அறியவருமென்பது பெறப்பட்டது.

உலகு என்பது உலகப்பற்றைக்குறித்தது. உலகம் நீங்கினும் உலகப் பற்று நீங்கவில்லையாயின் நீங்கிய உலகம் மீளவுந் தோற்றக் கூடுமாகையால் சுத்தனாதலில்லை. இக்கருத்தினை, † "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்" என்னுந் திருவாக்கானுந் தெளிக. உலகும் என்றவிடத்து உம்மை இழிவு சிறப்பு. சுத்தனும் என்றவிடத்து உம்மை உயர்வு சிறப்பு. (கரு)

(அ - கை.) சீவன் முத்தன் அத்துவாக்களின் உள்ளும் புறம்பும் ஒழிவறவிளங்குவனெனக் கூறுகின்றார்.

16. நிருபாதி பரசிவத்தால் நிகழ்சடாத் துவாக்கள்
வருமாறு தோற்றுவித்த மாயையிரண் டருவாகி
ஒருவாம லறுவகையி னுட்புறம்பு முறல்போலப்
பெருஞான சீவன்முத்தர் பிறங்குவர் தீங்கறுத்தே.

(இ - ள்.) நிருபாதி பரசிவத்தால் - உபாதியில்லாத சிவபரம் பொருளால், நிகழ் சடாத்துவாக்கள் வருமாறு தோற்றுவித்த மாயையிரண்டு -

† திருக்குறள் துறவு. செ. க-

விளங்குகின்ற ஆறு அத்துவாக்களும் தோன்றுமாறு தோற்றுவித்த சுத்த மாயை அசுத்த மாயை யிரண்டும், அருவாகி - அரூபமாகி, அறுவகையின் உள்புறம்பும் ஒருவாமல் உறல்போல - அந்த ஆறத்துவாக்களின் உள்ளும் புறம்பும் நீங்காது பொருந்திவிளங்கு மாறுபோல, பெருஞான சீவன்முத்தர் - பேரறிவுடைய சீவன்முத்தர், நீங்கறுத்து பிறங்குவர் - (அவ்வத்து வாக்களின் உள்ளும் புறம்பும்) தடையின்றி விளங்குவர் எ - று.

(போ - ரை.) உபாதியில்லாத சிவபரம் பொருளால் விளங்குகின்ற ஆறு அத்துவாக்களும் தோன்றுமாறு தோற்றுவித்த சுத்தமாயை அசுத்த மாயை யிரண்டும், அரூபமாகி அந்தஆறத்துவாக்களின் உள்ளும் புறம்பும் நீங்காது பொருந்தி விளங்குமாறுபோல, பேரறிவுடைய சீவன்முத்தர் அத்துவாக்களின் உள்ளும் புறம்பும் தடையின்றி விளங்குவர் எ - று.

(க - ரை.) சீவன்முத்தர், உலகப்பொருள்கள் அனைத்தினிடத்தும் உள்ளும் புறம்பும் தடையின்றி விளங்குவர் என்பதாம்.

மாயையிரண்டு என்றவிடத்து முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. ஈற்றிலுள்ள ஏகாரம்அசை. பரசிவந்தான் என்று பாடங்கொள்ளின், தான் என்பதை அசையாக்கி, அத்துச்சாரியையும் ஆலுருபும் தொக்கனவாகக் கொள்க.

உபாதியென்பது பிறிதொன்றன் சேர்க்கை. பரசிவம்ஒன்றினுந்தோய் வின்றிச் சுயம்பிரகாசமாய் நிற்பது ஆதலின் நிருபாதி பரசிவம் எனப்பட்டது.

மாயைசடப்பொருளாதலின் தானேதன் காரியத்தைத் தோற்றுவிக் காது. மண், கடம்முதலியவற்றைத் தானே தோற்றுவிக்காத வாறுபோ லும். கடம்முதலியவற்றை மண்ணினின்றுங் குலாலன் தோற்றுவிக்குமா றுபோல, அத்துவாக்கள் ஆறனையும் மாயையினின்று சிவன் தோற்றுவிப் பன். இக்கருத்துப்பற்றியே, †"தந்திடும் சிவனவன்றன் சந்நிதி தன்னி னின்றே." என்றருளிச் செய்தனர் அருணந்திசிவாசாரியர்.

அத்துவாக்கள் ஆறு:—மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம், கலையென்பன. வன்னமென்பது அக்கரம். கலையென்பது நிவிருத்தி, பிர திட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதையென்பன. இந்த ஆறு அத்துவாக் களும் சுத்தமாயாகாரியங்களாகும். இவற்றுள், தத்துவம் புவனம் என் னும் இரண்டும் அசுத்தமாயாகாரியங்களாகவுந் தோன்றும். அசுத்தமாயா புவனவாசிகளுக்கும் ஏனையநான்கும் சுத்தமாயாகாரியங்களே. அத்துவா என்பதன் பொருள், வழி. இவைவழியாமாறும் பிறவும் சிவஞானசித்தியார் எட்டாஞ்சூத்திரத்தில் விரித்துக் கூறினுமாதலின் அவ்விடத்துக்காண்க.

---

† சிவஞானசித்தியார் க-ம். சூ-ம். செ. கக.

மண், கடத்தைத் தோற்றுவித்து அக்கடத்தின் உள்ளும் புறம்பும் விளங்குமாறுபோல, மாயையுந் தன்காரியத்தைத் தோற்றுவித்து அதன் உள்ளும் புறம்பும் விளங்கும். விளங்கினும் மண்போல மாயை உருவப் பொருளன்மையின் கண்ணால் காணப்படுதலில்லை. கண்ணால் காணப்படாதது கொண்டு மாயையென்ப தொன்றில்லையென்றல் கூடாது. கண்ணால்காணப்படாத கடவுளும் உயிரும் உண்டென்பதுபோல மாயையும் உண்டென்பது துணிபு.

உருவப்பொருளாயுள்ள மண், உருவப்பொருளாயுள்ள கடம்முதலியனவாய்த் தோன்றுதல் பொருத்தமுடைத்து. அருவப்பொருளாயுள்ள மாயை உருவப்பொருளாயுள்ள அத்துவாக்களாய்த்தோன்றுதல் கூடுமென்பது எவ்வாறு பொருந்துமெனின், மரம்முதலியன உருவமாய்த் தோன்றுதற்கு முன் அருவமாயிருந்து பின் உருவமாய்த் தோன்றுமாறு போல, அருவமாகியமாயையிலிருந்து அத்துவாக்களுந் தோன்றுமாதலின்பொருந்துமென்க.

உருவமாய்விளங்கும் வித்துத்தானே மரமாய்த் தோன்றுகின்றதெனின், அன்று. வித்தினிடத்து அடங்கியிருக்கும் அருவமாகிய மரசத்தியே உருவமாய்த் தோன்றுகின்றது. அந்தச் சத்திக்குவித்து பற்றுக்கோடாயிருப்பது. இவ்வாறே மாயைக்குச் சிவம் பற்றுக்கோடாயிருக்கும். மாயை அருவமென்பதும் அதினின்று உருவந்தோன்றுமென்பதும், * "அருவினிலுருவந்தோன்றி" என்னுந் திருவாக்கானும் பெறப்படும்.

அத்துவாக்களுள், புவனம் தூலவுருவம். தத்துவம் சூக்குமவுருவம். கலைமுதலிய ஏனைய நான்கும் அதிசூக்கும உருவம்.

சீவன்முத்தன் எனப்படும் ஆன்மா, அருவாகிய ஞானரூபமாதலின், எல்லாப் பொருள்களினிடத்தும் உள்ளும் புறம்பும் விளங்குமென்பதுணர்த்துதற்கு மாயை உவமையாகக் கூறப்பட்டது. (கசு)

(அ - கை.) காணப்படும் பொருள்களனைத்தையும் ஞானவெளியாகக் காணவேண்டுமெனக் கூறுகின்றார்.

17. வானம் போல வடிவில தாயெங்கும்
ஆனதாகத் தியானம்பண் ணாதவன்
கானந்தன்னி லுலண்டெனக் கட்டுப்பட்
டீனமான பிறப்பிறப் பெய்துமே.

(இ - ள்.) எங்கும் - எவ்விடத்துள்ள எத்திறப் பொருள்களும், வானம்போல வடிவுஇலதாய் ஆனதாக தியானம் பண்ணாதவன் - ஆகாயம் போல உருவமில்லாததாயானதாகச் சிந்தனைசெய்யாதவன், கானந்தன்னில் உலண்டுஎன கட்டுபட்டு - காட்டிலுள்ள உலண்டுப் பூச்சியைப்போலப் (பாசத்தால்) கட்டுப்பட்டு, ஈனமானபிறப்பு இறப்பு எய்தும் - இழிவான பிறப்புஇறப்புக்களைப் பொருந்துவன் எ - று.

* சிவஞான சித்தியார். க-ம். சூ-ம். செ. உஎ.

(போ - ரை.) எவ்விடத்துள்ள எத்திறப் பொருள்களும் ஆகாயம் போல உருவமில்லாததா யானதாகச் சிந்தனைசெய்யாதவன், காட்டிலுள்ள உலண்டுப்பூச்சியைப் போலப்பாசத்தால் கட்டுப்பட்டு இழிவான பிறப்பிறப் புக்களைப் பொருந்துவன் எ - று.

(க - ரை,) எவ்விடத்தும் ஞானவெளியாக அறியாதவன் பிறந்திறந் துழலுவன் என்பதாம்.

ஈற்றிலுள்ள ஏகாரம் அசை.

உலண்டென்னும் பூச்சியானது தன்வாயில் நின்றும் நூலிழைத்துக் கூடுகட்டி வெளியே போகமுடியாது அக்கூட்டில் கட்டுப் பட்டிறக்கும். அதுபோல, மக்கள், யான் எனது என்னும் சங்கற்பத்தால் கட்டுப்பட்டுப் பிறந்திறந்துழலுவர். ஆதலின், அங்ஙனம் கட்டுப்படாதிருத்தற் பொருட்டு எவற்றையும் ஞானவெளியாகக் காணவேண்டும். இக்கருத்துப் பற்றியே * "சீவன் முத்தர் சிவமே கண்டிருப்பர்." என்றனர் ஸ்ரீஅருணந்தி சிவாசாரியர். (கஎ)

(அ - கை) பிறவி அனைத்தும் துன்பமே யெனக் கூறுகின்றார்.

18. யாவ ராயினு மெப்பிறப் பெய்தினும்
ஆவ தாவ தருந்துய ராதலால்
தீய துன்பஞ் செறுக்கற் பொருட்டந்தத்
தூய ஞானச் சுடரைத் தொடர்வரே.

(இ - ள்.) யாவர் ஆயினும் - எவர்களாயினும், எப்பிறப்பு எய்தினும் - எந்தப்பிறவியை அடையினும், ஆவது ஆவது அருந்துயர் ஆதலால் - உண்டாவதுஉண்டாவதுபொறுத்தற்கரிய துன்பமே ஆகையால், அந்ததீய துன்பம்செறுத்தல் பொருட்டு - அந்தக் கொடிய துன்பத்தை நீக்குதற்கு, தூயஞானச் சுடரை தொடர்வர் - (சீவன்முத்தர்கள்,) பரிசுத்தஞான சொரூபமாய் விளங்கும் சிவபரம்பொருளையே சார்ந்து நிற்பர் எ - று.

(போ - ரை.) எவர்களாயினும், எந்தப்பிறவியை அடையினும், உண்டாவது உண்டாவது பொறுத்தற்கரிய துன்பமே ஆகையால் அந்தக்கொடிய துன்பத்தை நீக்குதற்கு, சீவன் முத்தர்கள், பரிசுத்தஞான சொரூபமாய் விளங்கும் சிவபரம்பொருளையே சார்ந்து நிற்பர் எ - று.

(க - ரை) பிறவியால் உண்டாவது துன்பமே ஆகையால், சீவன்முத்தர், சிவனையே சார்ந்து நிற்பர் என்பதாம்.

யாவராயினும் என்றவிடத்து, உம்மை, சீவன் முத்தராயினும் என்பது தோன்ற நிற்றலாலும், எப்பிறப்பெய்தினும் என்றவிடத்து, உம்மை, பிறப்பின் மேன்மையைக் குறித்தலாலும் இரண்டும் உயர்வு சிறப்பு.

---

* சிவஞானசித்தியார். கக-ம். சூ-ம். செ. உ.

ஆவது ஆவது என்னும் அடுக்கு துணிவு குறித்தது. † செய்யாமை செய்யாமை நன்று. என்பதுபோல.

சுடரை என்றவிடத்து பிறவற்றைவிலக்கும் பிரிநிலை யேகாரந் தொக்குநின்றது. ஈற்றிலுள்ள ஒகாரம் அசை.

சீவன்முத்தரென்பது தோன்ரு எழுவாய். சீவன்முத்தியைப் பெற்றவருக்கும், தேகமிருத்தல் பற்றிப் பழையவாசனையால்விருத்தி புறத்து நிகழவரும். நிகழுங்காலத்து அது, ஈனவிருத்தி யின்றித் தூயவிருத்தியாயினும் அதனுல் மேலான பிறவியுண்டாம். பிறவி என்பது யாதாயினும் துன்பம் பயக்குமே யன்றி இன்பம் பயவாது. ஆதலின், * "பரஞானத்தால் பரத்தைத்தரிசித்தோர் பரமேபார்த்திருப்பர் பதார்த்தங்கள்பாரார். சீவன் முத்தர்சிவமே கண்டிருப்பர்." என்னுந் திருவாக்கின்படி சிவமொன்றே தெரியக்கண்டு பிறப்பினை யெய்தாதிருக்கவேண்டு மென்பது இதனுற் கூறப்பட்ட பொருளாகும்.

இயல்பாகவே, மலசம்பந்த மில்லாத ஞான மென்பதுணர்த்த தூய ஞானம் என்ருர். (கஅ)

(அ - கை.) சீவன்முத்தர், சரியை கிரியை யோகங்களை விட்டு ஞானத்தால் சிவனையே சிந்தித்துக்கொண்டிருப்பரெனக் கூறுகின்ருர்.

19. கருமமுஞ் சரியையுங் கழறப் பட்டவவ்
வருமைசேர் ஞானத்தை யடைவ ராதலால்
இருமையி லியோகமு மெய்த லின்றியே
திருமலி பரம்பொரு டன்னைச் சிந்திப்பார்.

(இ - ள்.) கழறப்பட்ட - (சீவன்முத்தர்,) சொல்லப்பட்ட, சரியையும் - சரியையும், கருமமும் - கிரியையும், இருமையில்யோகமும் - உசுவாச நிசுவாசங்களை யடக்கும் யோகமும், எய்தல்இன்றி - செய்யாது, அவ்அருமை சேர் ஞானத்தை அடைவர் - அந்த அடைதற்கு அருமையான ஞானத்தையடைவர், ஆதலால் திருமலி பரம்பொருள் தன்னைச்சிந்திப்பர் - ஆகையால் செல்வம் நிறைந்த சிவபரம்பொருளைச் சிந்தனை செய்துகொண்டிருப்பர் எ - று.

(போ - ரை.) சீவன்முத்தர், சொல்லப்பட்ட சரியையும் கிரியையும் உசுவாச நிசுவாசங்களை யடக்கும் யோகமுஞ் செய்யாது, அந்த அடைதற்கருமையான ஞானத்தையடைவர். ஆகையால் செல்வம் நிறைந்த சிவபரம் பொருளைச் சிந்தனை செய்துகொண்டிருப்பர் எ - று.

---

† திருக்குறள். வாய்மை. செ. எ.
* சிவஞானசித்தியார். கக. சூ - ம் செ. உ.

(க - ரை.) சீவன்முத்தர், பிறவிக்கேதுவாகிய சரியைகிரியை யோகங்களைச் செய்யாது, ஞானத்தால் சிவனையே சிந்தித்துக்கொண்டிருப்பர் என்பதாம்.

அகரம் மேலேகூறப்பட்ட ஞானத்தைச் சுட்டிற்று. இன்றியே என்றவிடத்து ஏகாரம் அசை.

சரியை - சிவாலயத்தில் திருவலகிடுதல் முதலியன.

கிரியை - சிவபூசை முதலியன.

யோகம் - பிராணயாமம் முதலியன.

இம்மூன்றின் விரிவை சிவஞானசித்தியார் அ - ம். சூ - ம். கக, உ0, உக-வது செய்யுட்களாலும் அவற்றின் உரையாலுந் தெரிந்துகொள்க.

திரு - முற்றுணர்வு முதலிய எண்குணங்கள். இவை, முத்தரிடத்து சிவனைச் சார்ந்து நிற்றலால் விளங்கித்தோன்றும். சிவனிடத்து இயல்பாக வேநிறைந்திருக்கும். ஆதலின், திருமலிபரம்பொருளென்றனர். (ககூ)

(அ - கை.) போகப் பற்றுவிட்டவரே சீவன் முத்தரெனக்கூறுகின்றார்.

20. சத்தி பாதலந் தான்முத லீறதா
வைத்த வைய மெலாமசத் தாதலால்
மெய்த்த ஞானத்தி னாலிவை விட்டவர்
சுத்த மாகிய சூனிய வாதிகள்.

(இ - ள்.) சத்திமுதல் பாதலம் ஈறதுஆ - சத்திதத்துவத்திலிருக்கும் புவனம் முதல் பாதலம்முடிவாக, வைத்தவையம் எலாம் அசத்து ஆதலால் - உள்ள புவனங்களெல்லாம் நிலைபேறின்றி அழிவனவாதலின், மெய்த்த ஞானத்தினால் - நிலைபேறுடைய சிவஞானத்தால், இவை விட்டவர் - இவற்றின் பற்றை விட்டவர், சுத்தம் ஆகிய சூனியவாதிகள் - இயல்பாகவே மலமில்லாத சிவபரம்பொருளை அறிந்த முத்தராவர் எ - று.

(போ - ரை.) சத்திதத்துவத்திலிருக்கும் புவனம் முதல் பாதலம் முடிவாக உள்ள புவனங்களெல்லாம் நிலைபேறின்றி அழிவனவாதலின், நிலைபேறுடைய சிவஞானத்தால் இவற்றின் பற்றைவிட்டவர், இயல்பாகவே மலமில்லாத சிவபரம்பொருளை அறிந்த முத்தராவர் எ - று.

(க - ரை.) சிவஞானத்தால் போகப்பற்றை விட்டவரே, சிவனையறிந்தசீவன்முத்தராவர் என்பதாம். தான் - அசை.

நோயாலும் வறுமையாலும் மனவருத்தத்தாலும் விரதங்காத்தலானும் இவைபோல்வன பிறவாற்றாலும் ஒருவனுக்குப் போகப் பற்றுநீங்குதல் கூடும். இந்தப் பற்று நீக்கம் நிலைபெறாது நோய்முதலிய வற்றின் நீக்கத்

தில் விட்டபோகத்தைப் பற்றுதல் கூடுமாதலின், சிவஞானத்தால் போகப் பற்றை விடவேண்டுமென்று கூறினர். பாசஞான பசுஞானங்கட்குப் பற்றுக்கோடான பொருள்கள் அநித்தியமாதல்போல, அந்தஞானங்களும் அநித்தியமாம். சிவஞானத்திற்குப் பற்றுக்கோடான சிவம்நித்தியமாதல் போல சிவஞானமும் நித்தியமாதலின், மெய்த்தஞானமென்றார்.

இவையென்பது போகப் பற்றைக்குறித்தது.

சுத்தமென்பது இயல்பாகவே மலமில்லாமையைக் குறித்தது.

சூனியமென்பது சுட்டியறியப்படாமையைக் குறித்து சிவத்தின் மேல்நின்றது. (உ௦)

(அ - கை.) சித்தசலனமே போகப் பற்றுக்குக் காரணமெனக் கூறுகின்றார்.

21. மருவிய பொருண்மே லன்பாய் வானரம் போற்சரித்துத்
திரியுமச் சித்தந் தன்னைத் திருத்திச்சூ னியத்தேநின்றால்
மருவினோர் பிரிதலின்றி வானவ ரறிவுக் கெட்டாப்
பொருவிலா நித்தசுத்தப் பொருளினை யடைவரன்றே.

(இ - ள்.) மருவியபொருள்மேல் அன்பாய் - சார்ந்தபொருளினிடத்துப் பற்றுவைத்து, வானரம்போல்(சித்தம்) சரித்துதிரியும் - குரங்குபோல் மனம் ஒன்றைவிட்டொன்றைப் பற்றிஅலைந்துதிரியும், அச் சித்தம்தன்னை திருத்தி - அந்தமனத்தைப் பொருள்களினிடத்துச் செல்லவொட்டாது தடுத்து, சூனியத்தே நின்றால் - சிவபரம் பொருளைப் பற்றிநிற்பாராயின், மருவினோர் - அங்ஙனம் நிற்பவர், பிரிதலின்றி வானவர் அறிவுக்கு எட்டா பொருவுஇலா நித்தசுத்த பொருளினை அடைவர் - தன்னைவிட்டுப் பிரியாததாயும், தேவர்கள் அறிவிற்கும் எட்டாததாயும், ஒப்பில்லாததாயும், நித்தமாயும், சுத்தமாயுமுள்ள அச் சிவப்பொருள் விளங்கித்தோன்றப் பெறுவர் எ - று.

(பொ - ரை.) சார்ந்த பொருளினிடத்துப் பற்றுவைத்துக் குரங்குபோல்மனம் ஒன்றைவிட்டொன்றைப் பற்றிஅலைந்துதிரியும். அந்த மனத்தைப் பொருள்களினிடத்துச் செல்லவொட்டாது தடுத்து, சிவபரம்பொருளைப் பற்றி நிற்பாராயின், அங்ஙனம் நிற்பவர், தன்னைவிட்டுப் பிரியாததாயும் தேவர்கள் அறிவிற்கும் எட்டாததாயும் ஒப்பில்லாததாயும் நித்தமாயும் சுத்தமாயுமுள்ள அச் சிவப்பொருள்விளங்கித் தோன்றப் பெறுவர். எ - று.

(க - ரை.) உலகப்பொருளைப் பற்றவொட்டாது மனத்தைத்தடுத்து சிவப்பொருளைப் பற்றிநிற்பவர் சிவம் விளங்கித் தோன்றப்பெறுவர் என்பதாம்.

குரங்கு, தான் உண்ணுதற்குரியகனி ஒரு மரத்தில் ஒரு கிளையில் நிரம்ப இருப்பினும், அமைந்து உண்ணாது கிளைகள் தோறும் மரங்கள் தோறும் தாவித்திரியும். ஆதலின் ஒன்றைவிட்டு ஒன்றைப்பற்றிச் சுழன்றுதிரியும் மனத்திற்கு அது உவமையாயிற்று.

அகரச்சுட்டால், சரித்துத்திரியும் என்னும் வினைக்கு வினைமுதலாகிய சித்தம்வருவிக்கப்பட்டது. தன் இடைச்சொல்.

திருத்துதல் - தடுத்தல்.

சூனியத்தே நின்றால் பொருளினையடைவர் என்றதனால், சூனியம் பாழன்றுசிவப்பொருளென்பது வலியுறுத்தப்பட்டது. பொருளென்றவிடத்து அகரச் சுட்டுவருவித்துரைக்க. பிரிதலில்லாதபொருள், விளங்கித்தோன்றுதலை அடைவரென்றது உபசாரம்.

வானவர் அறிவுக்கு என்றவிடத்து சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. அன்றே - அசை. (உக)

(அ - கை.) தேகப்பற்றைவிட்டவர் நீங்காத சிவானந்தத்தை யடைவரெனக்கூறுகின்றார்.

22. மேலாய வின்பமாகி விண்போ லுட் புறம்பதாகிக்
காலாதி தத்துவங்கள் கலவாது காயமின்றி
மாலாய காணமின்றி யறிவாகி யெங்குங் காணும்
சீலாய ஞானஞ் சேர்ந்தோர் திரியாவா நந்தியாவர்.

(இ - ள்.) காலாதி தத்துவங்கள் கலவாது - காலம்முதலிய வித்தியாதத்துவங்களைக்கூடாது, மால் ஆயகாணம் இன்றி - மயக்கத்தைச்செய்வனவாகிய ஆன்மதத்துவங்களையுங் கூடாது, காயம்இன்றி - தூலசரீரப்பற்றைவிட்டு, அறிவாகி - அறிவுவடிவாகி, எங்கும் காணும் சீலாயஞானம் சேர்ந்தோர் - எவ்விடத்துள்ள எத்திறப் பொருளையுங்காணவல்ல சிறப்புவாய்ந்த சிவஞானத்தையடைந்தவர், மேல் ஆயஇன்பம் ஆகி - பேரின்பவடிவமான சிவமாகி, விண்போல் உள்புறம்பது ஆகி - ஆகாயத்தைப்போல் காணப்படும் பொருள்களின் உள்ளும் புறம்பும் நிறைந்து, திரியா ஆநந்தி ஆவர் - மாறுதலடையாத இன்பத்தை உடையவராவர் எ - று.

(பொ - ரை.) காலம் முதலிய வித்தியாதத்துவங்களைக் கூடாது மயக்கத்தைச் செய்வனவாகிய ஆன்மதத்துவங்களையுங் கூடாது, தூலசரீரப் பற்றைவிட்டு, அறிவுவடிவாகி, எவ்விடத்துள்ள எத்திறப் பொருளையுங் காணவல்ல சிறப்புவாய்ந்த சிவஞானத்தையடைந்தவர் பேரின்ப வடிவமான சிவமாகி, ஆகாயத்தைப்போல் காணப்படும் பொருள்களின் உள்ளும் புறம்பும் நிறைந்து, மாறுதலடையாத இன்பத்தை உடையவராவர் எ - று.

(க - ரை.) தூலசூக்கும சரீரப்பற்றை விட்டுச் சிவஞானத்தை யடைந்தவர் சிவானந்தத்தை அநுபவிப்பர் என்பதாம்.

மேலைச் செய்யுளில் போகப் பற்றுக்குக் காரணம் சித்தசலன மெனக் கூறி, சித்தசலனம் ஒழிதற்குத்தேகப்பற்று நீங்கவேண்டுமென இச்செய்யுளாற்கூறியவாறும். புறம்பது என்றவிடத்து அதுபகுதிப்பொருள் விகுதி.

வித்தியாதத்துவம் - காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயையென்பன. மாயையென்பது தத்துவத் தோற்றத்திற்குக் காரணமாய்க் கலக்குண்டபாகம்.

ஆன்மதத்துவம் - மூலப்பிரகிருதி, புத்தி, அகங்காரம், மனம், என்னும் நான்கும், மெய் வாய் கண் மூக்கு செவி யென்னும் ஞானேந்திரியம் ஐந்தும், வாக்கு பாதம் பாணி பாயு உபத்தம் என்னும் கன்மேந்திரியம் ஐந்தும், சத்தம் பரிசம் ரூபம் இரதம் கந்தம் என்னும் தன்மாத்திரை ஐந்தும், பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் பூதம் ஐந்தும் ஆக இருபத்து நான்கு. சித்தம், மனத்தின் வியாபாரபேதமேயன்றித் தனித்தத்துவமன்று. இந்தத்தத்து வங்களின் தோற்றம் செயல் முதலியன சிவஞான சித்தியார் இரண்டாஞ் சூத்திரத்துள்விரிவாய்க் கூறப் பட்டிருத்தலின் அவ்விடத்துக் காண்க.

காயம் - தூலசரீரம். அது ஆகுபெயர்ப்பொருளால் தூலசரீரப் பற்றைக்குறித்தது.

சீலம் ஆய என்பது அம்கெட்டு சீலாய எனநின்றது. * ஞானல் என்பதுபோல. (உஉ)

(அ - கை.) சித்தசலனம் ஒழிதற்குத் தேகப்பற்று போகப்பற்று என்னும் இருவகைப் பற்றும் நீங்கவேண்டுமென்பதைத் திருட்டாந்த முகத்தாற் கூறுகின்றார்.

23. மூண்டு பற்றி முழங்கி யெழுங்கனல்
ஈண்டு காட்ட மிலதே லிலதாகும்
தீண்டு மப்பொரு ளின்றெனிற் சித்தமும்
மாண்டு தோற்ற மிலதாய் மடிந்திடும்.

(இ - ள்.) பற்றி மூண்டு முழங்கி யெழும் கனல் - (விறகைப்) பற்றி மூண்டு ஆரவாரித்து மேலோங்கும் அக்கினியானது, ஈண்டு காட்டம் இலது எனில் இலது ஆகும் - நெருங்கிய விறகு இல்லையாயின் இல்லையாகும். அது போல, தீண்டும் அப்பொருள் இன்று எனில் - பொருந்தப்படுவதாய் மேலே கூறப்பட்ட போகப்பொருள் தேகப்பொருள் இல்லையாயின், சித்தமும்

* சிவஞானசித்தியார், க - ம் சூ - ம். செ, கஉ.

மாண்டு தோற்றம் இலதுஆய் மடிந்து இறும் - மனமும் மாட்சிமைப்பட்டு மீண்டு தோன்றாதவாறு இறக்கும் எ - று.

(பொ - ரை.) விறகைப் பற்றி மூண்டு ஆரவாரித்து மேலோங்கும் அக்கினியானது, நெருங்கிய விறகு இல்லையாயின் இல்லையாகும். அது போல, பொருந்தப்படுவதாய் மேலே கூறப்பட்ட போகப் பொருள் தேகப்பொருள் இல்லையாயின், மனமும் மாட்சிமைப்பட்டு மீண்டு தோன்றாதவாறு இறக்கும் எ - று.

(க - ரை.) விறகின் சம்பந்தமில்லாத அக்கினி கெடுமாறுபோல, பொருள்களின் சம்பந்தமில்லாத மனம்கெடும் என்பதாம்.

உவமான உவமேயங்களின் தர்மத்தை எடுத்துக்காட்டுதலின், இச் செய்யுள் எடுத்துக்காட்டுவமையணி.

ஈண்டு முதனிலைத் தொழிற்பெயர். ஈண்டுதல் - நெருங்குதல்.

பொருள் சாதியொருமை.

சித்தமும் என்றவிடத்து உம்மை இழிவு சிறப்பு.

மாண்டு - மாட்சிமைப்பட்டு. மாட்சியாவது குரங்குபோல் அலையாமை. மாண்டு என்பது மாட்சிமைப்பட்டு என்னும்பொருளைத் தருமென்பது, * மாண்டார் நீராடி என்பதனாலறிக.

மடிந்திறு மென்பது ஒருசொல். † பாழ்படுதல் என்புழிப்போல.

பொருளின்மையாவது, பற்றில்லாமையால் பற்றுக்கோடாகத் தோன்றாமை. (உங)

(அ - கை.) போகப்பற்றால் நிகழும் அவத்தைகளை யெடுத்துக்காட்டி அவற்றில் கட்டுப்படாதவரே முத்தரெனக் கூறுகின்றார்.

24. மோக மூர்ச்சிகை மாயை முதற்கன
வாய சாக்கிர மல்லாச் சுழுத்தியும்
ஏய வெண்ணு மவத்தைக ளியாவையும்
வீய நோற்பவர் வீடு விடாதவர்.

(இ - ள்.) மோகம் ஆய - போகங்களில் பற்றுவைத்தலால் உண்டாகின்ற, சாக்கிரம் - சாக்கிரமும், கனவு - சொப்பனமும், அல்லாசுழுத்தியும் - இவ்விரண்டுமல்லாத சுழுத்தியும், மூர்ச்சிகை - துரியமும், முதல்மாயை - துரியாதீத மும்என, ஏய எண்ணும் அவத்தைகள் யாவையும் - பொருந்துவதாய்க் கருதப்படும் அவத்தைகளனைத்தும், வீயநோற்பவர் வீடு விடாதவர் - நீங்கும்படி சிவனோடு கலந்து நிற்றலிற்பயிலுந் தவமுடையார் சீவன் முத்தராவர் எ - று.

* திருக்குறள். கூடாவொழுக்கம். செ. அ.
† ௸ விருந்தோம்பல். செ. ங.

(போ - ரை.) போகங்களில் பற்றுவைத்தலால் உண்டாகின்ற, சாக்கிரமும் சொப்பனமும் இவ்விரண்டு மல்லாத சுழுத்தியும் துரியமும் துரியாதீதமும் எனப் பொருந்துவதாய்க் கருதப்படும் அவத்தைகளனைத்தும் நீங்கும்படி, சிவனோடுகலந்து நிற்றலிற் பயிலுந்தவமுடையார் சீவன்முத்தராவர் எ - று.

(க - ரை.) சாக்கிரம் முதலிய அவத்தைகளில் நின்று நீங்கினவரே சீவன்முத்தரென்பதாம்.

செய்யுளாதலின், சாக்கிரம் முதலியவற்றை முறைபிறழவைத்தார்.

அவத்தை - நிலை.

கேவலம் சகலம் சுத்தமென்னும் மூன்றவத்தைகளினும், சாக்கிரம் முதலிய ஐந்தவத்தைகள் தனித் தனி நிகழும். கேவலம் முதலிய மூன்றும் காரணம் காரியமென தனித் தனி இருதிறப்படும். அவற்றுள்,

காரணகேவலம் - மலத்தோடு கூடிநிற்கும் அநாதிநிலை.

காரணசகலம் - மலநீக்கத்தின் பொருட்டு இறைவனாற்றரப்படும் தநுகரணமுதலியவற்றைப் பொருந்திப் பிறந்திறந் துழலுநிலை.

காரணசுத்தம் - மலம்அறவே நீங்கச் சிவனோடு பிரிப்பின்றி நிற்றலையறிந்து சிவமாய் நிற்குநிலை.

காரியகேவலம் - தொழிற்பாடின்றி நித்திரை செய்யும் நிலை.

காரியசகலம் - எல்லாக் கருவிகளோடுங் கூடித் தொழிற்படு நிலை.

காரியசுத்தம் - யோகசாதனஞ் செய்யு நிலை.

இவை ஒவ்வொன்றினுந் தனித் தனி ஐந்தவத்தைகள் நிகழும் முறையும் பிறவும் சிவஞானபோதச் சிற்றுரைவிளக்கம் சிவஞானசித்தியார் சுபக்கம் நான்காஞ் சூத்திரங்களில் விரித்துக் கூறியிருக்கின்றமையாதலின் இவ்விடத்து விரித்திலம்.

மூர்ச்சிகை - மயங்கிப் பெருமூச்சுவிட்டு நிற்கும் நிலை. இதுகாரியகேவலத்தும் சகலத்தும் நிகழும் துரியம்.

முதல்மாயை - கலாதிதத்துவங்களின் தோற்றத்திற்குக் காரணமான மாயையின் கலக்குண்ட பாகத்தோடுகூடி ஆநந்தமயகோசனாய் நிற்கும் துரியாதீத நிலை. இதுவும் காரிய கேவலசகலம் இரண்டினும் நிகழும்.

வீய - நீங்க. * வீயாது பின்சென்றடும் என்றவிடத்து வீயாமை, நீங்காமை குறித்தவாறு காண்க.

வீடுவிடாதவர் - சீவன்முத்தர். (உச)

(அ - கை.) தூலசூக்கும சரீரங்களைத் தனக்கு வேறெனவறிந்தவனுக்கு ஞானம் விளங்கித்தோன்றுமெனக் கூறுகின்றார்.

---

* திருக்குறள் - தீவினையச்சம். செ. எ.

25. உடம்பி ரண்டு முயிர்ப்புட னுள்ளமும்
மடம்ப டும்மகங் காரமும் புந்தியும்
திடம்ப டத்தன்னில் வேறெனச் சிந்திப்பான்
உடம்பி லாஞான வுள்ளொளி யுள்ளூறும்.

(இ - ள்.) உடம்பு இரண்டும் - தூலவுடம்பு சூக்குமவுடம்பு என்னும் இரண்டும், உயிர்ப்புடன் உள்ளமும் - பிராணவாயுவும் மனமும், மடம்படும் அகங்காரமும் புந்தியும் - அறியாமையைச்செய்யும் அகங்காரமும் புத்தியும், தன்னில்வேறு என திடம்பட சிந்திப்பான் - ஆன்மாவாகிய தன்னில் நின்றும் வேறெனஉறுதியாக அறிந்தவனுக்கு, உடம்பிலாஞானஉள்ளொளி உள்ஊறும் - சிவஞானமாகிய உள்ளொளியானது ஆன்மாவாகிய தன்னி டத்தில் விளங்கித்தோன்றும் எ - று.

(பொ - ரை.) தூலவுடம்பு சூக்குமவுடம்பு என்னும் இரண்டும், பிராணவாயுவும், மனமும், அறியாமையைச்செய்யும்அகங்காரமும், புத்தியும் ஆன்மாவாகிய தன்னில் நின்றும் வேறென உறுதியாக அறிந்தவனுக்கு, சிவஞானமாகிய உள்ளொளியானது ஆன்மாவாகிய தன்னிடத்தில் விளங் கித்தோன்றும் எ - று.

(க -ரை.) உடம்பின்வேறாகத்தன்னைத் தெரிந்தவனுக்குச் சிவஞானம் விளங்கித்தோன்றும் என்பதாம்.

உடம்புஇரண்டு எனப்பொதுவாகக்கூறி, அவைஇவையென விளக்க வேண்டி, பிராணன் முதலியவற்றைச் சிறப்பாக எடுத்துக்காட்டினார். காட்டவே, பிராணன் தூலதேகத்தையும், உள்ளம் முதலியன சூக்கும தேகத்தையுங் குறித்தவாறும்.

பிராணவாயுவென்பது, சூக்குமசரீரத்தின் உறுப்புக்களு ளொன்றாகிய வாயுபூதத்தின் காரியமாகும். இந்தப்பிராணவாயு தூலசரீரத்துக்குக் காவலாயுள்ளது. இது, உயிர்போல இயங்குந் தன்மையுடையதுபற்றி உபசாரமாய் உயிரெனவுங் கூறப்படும். இது, இயங்கும் போதுதான்நாடி முதலிய எல்லாத்தத்துவங்களும் இயங்கும். இது, இயங்கவில்லையாயின் ஒருதத்துவமுந் தொழிற்படாது. அம்மட்டோ உயிருந் தூலவுடலைவிட்டு நீங்கி விடும். ஆதலின், தூலவுடலைக் குறித்தற்குப் பிராணவாயுகூறப்பட்டது.

உயிர்த்தலைச்செய்யும் பிராணவாயு, உயிர்ப்பெனப்பட்டது.

உள்ளம் - மனம். இதன்றொழில் இதுவோஅதுவோ என ஐயுறுதல். இந்தஐயம், நிருவிகற்பமாய்க் கண்டதொரு பொருளிற்றான் நிகழுமாதலின், மனத்தைக்கூறவே, நிருவிகற்பமாய்க் (பிண்டமாய்) காணும் சித்தமுங் கூறப்பட்டதாயிற்று.

அகங்காரம் - இது, இன்னதாமென நிச்சயிப்பேன் என்னுந் தொழிலினையுடையது. யானல்லாத வுடம்பையானென்றும், எனதல்லாத பொருள்களை எனதென்றும், அபிமானிக்கச் செய்வதும் இதுவேயாதலின் மடம்படும் அகங்காரமென விசேடணங்கொடுத்துக் கூறப்பட்டது.

புத்தி - இது, இன்னதென நிச்சயிக்குந் தொழிலினையுடையது. அநுபவிக்கப்படும் பொருள்களனைத்தும் நிச்சயத்தோடு கூடியிருக்குமாதலின் புத்திபோக்கியமெனவும் படும். * "புத்தியவ் வியத்திற்றோன்றிப் புண்ணிய பாவஞ்சார்ந்து, வத்துநிச்சயமும் பண்ணி வருஞ்சுக துக்கமோகப், பித்தினின் மயங்கிஞானக்கிரியையும் பேணிநிற்கும்" என்பதனால் புத்திபோக்கியமென்பது பெறப்படுமாறு காண்க.

தோற்றமுறைபற்றி, புத்தி அகங்காரம் மனமெனக் கூறவேண்டுமாயினும், ஒடுக்கமுறைபற்றி மனம் அகங்காரம் புத்தியெனக்கூறினர்.

அந்தக்கரணம் நான்குங் கூறவே, சூக்குமசரீர தத்துவங்களனைத்துங் கொள்ளப்படும்.

தன்னில் என்பது தனில் என இடைக்குறைந்தது.

சிந்திப்பான் என்பது வினையாலணையும் பெயர். அவ்விடத்து நான்கனுருபுதொக்கு நின்றது. சிந்தித்தல் - அறிதல். யானென்னும் உணர்ச்சிக்குரியபொருள் யாதென அவ்வுணர்ச்சியை உற்றுநோக்குதலே உடம்பை வேறென அறிதல்.

உயிர் யாதானுமொன்றைப் பற்றி நிற்குமன்றித் தனித்துநில்லாது. உடம்பின்பற்று நீங்கினவிடத்துச் சிவனைப்பற்றி நிற்கும். அப்பொழுது நிகழும் சிவஞானத்தை உடம்பிலா ஞானமென்றார். அந்தஞானம், தன்னிடத்துப் பிரிப்பின்றிநிற்கும் சிவனை விளக்குதலின், உள்ளொளியெனப்பட்டது. புறவொளி - புறப்பொருளை விளக்கும் சூரியனொளிமுதலாயின.

உறுதல் - விளங்கித்தோன்றுதல். (உரு)

(அ - கை.) சாதனஞ் செய்யுங்காலத்து நிகழுந்தடைகளை, தயிரியத்துடன் நீக்கிச் சாதனத்தில் உறைத்துநிற்கவேண்டுமெனக் கூறுகின்றார்.

26. திருத்தகு சமாதியைச் செய்யுங் காலத்துக்
கருத்தெழுந் தடங்காது கலங்கு மாயினும்
வருத்தமா நித்திரை மருவு மாயினும்
திரித்தறி வுறுத்துத்தன் னிலையிற் சேர்க்கவே.

(இ - ள்.) திருத்தகு சமாதியை செய்யுங்காலத்து - சிறப்புவாய்ந்த சமாதியை அநுட்டிக்கும்பொழுது, கருத்து அடங்காது எழுந்து கலங்கும்

* சிவஞானசித்தியார். உ-ம் சூ-ம். செ. ருஅ.

ஆயினும் - மனமானது (பழையவாசனையால்) அடங்காது விடயங்களிற் சென்று கலக்கத்தை அடையுமாயினும், வருத்தம் ஆம் நித்திரைமருவும் ஆயினும் - சாதிக்கும் வருத்தத்தாலுளதாகும் நித்திரைவந்து பொருந்து மாயினும், திரித்து - அவற்றிற்செல்லவொட்டாது மனத்தைத் தடுத்து, அறிவுறுத்து - அவற்றால் உண்டாகுங்கேட்டை(அம்மனத்திற்கு)அறிவித்து, தன் நிலையில் சேர்க்க - சிவனோடு பிரிப்பின்றிநிற்கும் தனது உண்மைநிலை யில் அம்மனத்தைச் சேர்க்கவேண்டும் எ - று.

(பொ - ரை.) சிறப்புவாய்ந்த சமாதியை அநுட்டிக்கும் பொழுது, மனமானது பழையவாசனையால் அடங்காது விடயங்களிற்சென்று கலக்கத் தை அடையுமாயினும், சாதிக்கும்வருத்தத்தால் உளதாகும் நித்திரைவந்து பொருந்துமாயினும், அவற்றிற் செல்லவொட்டாது மனத்தைத் தடுத்து, அவற்றாலுண்டாகுங் கேட்டை அம்மனத்திற்கு அறிவித்து, சிவனோடு பிரிப் பின்றி நிற்குந்தனது உண்மைநிலையில் அம்மனத்தைச் சேர்க்கவேண்டும் எ - று.

(க - ரை.) சமாதியை அநுட்டிக்குங் காலத்து, மனம் சலனமடை யினும் நித்திரைவரினும் அவற்றைத்தடுத்து, சமாதியில் உறைத்து நிற்க வேண்டும் என்பதாம்.

ஈற்றிலுள்ள ஏகாரம் அசை.

சமாதி - ஆன்மாவாகியதான் சிவனையின்றித் தனித்து நில்லாமையை அறிந்து சிவமாய் நிற்கும் நிட்டை. இந்நிலையை அடைதலும், கன்மவசத் தால் அந்நிலையினின்று நழுவி தேகந்தானாதலும், மீண்டும் அந் நிலையை அடைதலுமாயுள்ள நிலை சாதனம். இடைவிடாது அந்நிலையில் நிற்றல் சாத்தியம். சாத்தியம் அநுபவம் என்பன ஒரு பொருட்சொற்கள். வேம்பு தின்ற புழு, அதனைவிட்டுக் கரும்புக்கொல்லையையடைந்து அதன்சுவையை அநுபவிக்கினும், பழையவாசனைபற்றி வேம்பையே நோக்குமாறுபோல, சாதனகாலத்தில் சிவம் விளங்கித் தோன்றினும் அதனைவிட்டுப் பழைய வாசனைபற்றி விடயங்களைப்பற்றும். அங்ஙனம் பற்றவருங்கால் விடயங்க ளாலுண்டாகுந் துன்பத்தை நினைந்து அவற்றினின்றும் நீங்கிச் சாதனத்தில் உறைத்து நிற்கவேண்டும்.

சாதனஞ்செய்வோர் நித்திரைசெய்தல்கூடாதென்பது இச்செய்யுளின் கருத்தன்று. நித்திரைக்கெனக் குறித்தகாலத்தும், நித்திரைசெய்யாமல் சரீரவருத்தந் தீராதகாலத்தும் நித்திரை செய்தல் இன்றியமையாதது. நித் திரை செய்ய வேண்டாத காலத்திற்றான் சாதனஞ் செய்யவேண்டும். அப் பொழுது நித்திரை வருமாயின், அது சரீர வருத்தத்தால் வந்ததன்று; தமோகுணமிகுதிப்பாட்டால் வந்ததென்று அறிந்து அதனைநீக்கவேண்டும் என்பதே இச்செய்யுளின் கருத்தாம்.

வருத்தம் என்றவிடத்து அத்துச் சாரியையும் ஆலுருபுந் தொக்குநின்றன. (உசு)

(அ - கை.) சாதனத்தில் உறைத்து அடங்கிய மனத்தை மீண்டும் விடயங்களில் திரும்பாத வண்ணங்காக்க வேண்டுமெனக் கூறுகின்றார்.

27. ஆராதசித்தம் யாதோர் காலத்தி னடங்கு மாஞல்
பேராமல் வருந்திக்காத்துப் பின்னைச்சிந் தனைகள்சென்று
சாராமல் வல்லவாறு தடுத்துச்சார் வானவெல்லாம்
சேராமல் மயக்கநீக்கித் திதமாகச் செய்துகொள்வான்.

(இ - ள்.) ஆராத சித்தம் யாது ஓர்காலத்தில் அடங்கும் ஆஞல் - பெற்றதுகொண்டு நிறைதலை யடையாதமனம் யாதானுமோர் காலத்தில் சலனமின்றி அடங்குமாயின், பேராமல் வருந்திக்காத்து - அவ்வடக்கத்தினின்றும் பிறழாதவாறுவருந்திக் காத்து, சிந்தனைகள் பின்னை சென்று சாராமல் வல்ல ஆறுதடுத்து - (பிறழ்ச்சிக்குக்காரணமான)விடயவாசனைகள் மீண்டும் வந்துபொருந்தாமைக்கு ஏற்றவழியால் அவ்வாசனைகளைத்தடுத்து, சார்வு ஆன எல்லாம் சேராமல் மயக்கம் நீக்கி - (வாசனைக்குக் காரணமாய்) பற்றுக்கோடாயுள்ளன அனைத்தும் மனத்தைப் பொருந்தாதவாறு (பொருந்துதற்குக் காரணமான) அறியாமையை நீக்கி, திதமாக செய்துகொள்வான் - நிலைபெறுமாறு செய்து கொள்ளக்கடவன் எ - று.

(பொ - ரை.) பெற்றதுகொண்டு நிறைதலையடையாத மனம் யாதானுமோர் காலத்தில் சலனமின்றி அடங்குமாயின், அவ்வடக்கத்தினின்றும் பிறழாதவாறு வருந்திக்காத்து, (பிறழ்ச்சிக்குக்காரணமான) விடயவாசனைகள் மீண்டும் வந்து பொருந்தாமைக்கு ஏற்ற வழியால் அவ்வாசனைகளைத் தடுத்து, (வாசனைக்குகாரணமாய்) பற்றுக் கோடாயுள்ளன அனைத்தும் மனத்தைப் பொருந்தாதவாறு, (பொருந்துதற்குக் காரணமான) அறியாமையைநீக்கி, நிலைபெறுமாறு செய்துகொள்ளக்கடவன் எ - று.

(க - ரை) சாதனத்தால் அடங்கியமனம் வாசனையால் விடயங்களில் மீளுமாயின், மீளாமைக்கேற்றவழியால் வாசனைகளைக் கெடுக்கவேண்டும் என்பதாம்.

செய்துகொள்வான் என்னும் பயனிலைக்கு சீவன் முத்தனென்னும் எழுவாய் வருவித்துரைத்துக்கொள்க. இங்கேகூறப்பட்ட செயல்களனைத்தும் சீவன் முத்தனுக்கு இலக்கணமாதலின், செய்துகொள்க வெனவிதியாகக்கூறாது செய்துகொள்வானென இலக்கணமாகக்கூறினார்.

ஆர்தல் - நிறைதல்.

யாதோர்கால மென்பது சாதனகாலம். காத்தலின் அருமைதோன்ற வருந்திக்காத்து என்றார்.

சிந்தனையென்பது சிந்திக்கப்படும் வாசனையைக் குறித்தது.

வல்லஆறு - ஏற்றவழி. அது, திருவைந்தெழுத்தை விதிப்படி கணித்தல். சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம் கூ-ம் சூத்திரத்து கூ-ம் அதிகரணத்தில் இதனை விரித்துக் கூறியிருக்கின்றா மாதலின் விரிவை அவ்விடத்திற்காண்க.

பிறழ்ச்சிக்குக் காரணம் வாசனையும், வாசனைக்குக் காரணம் பொருள்களினிடத்து வைத்துள்ளபற்றும், பற்றுக்குக் காரணம் அறியாமையு மாதலின், சிந்தனைகள் சென்று சாராமல் தடுத்து சார்வானவெல்லாம் சேராமல் மயக்கம் நீக்கி யெனமுறைப்பட வைத்தார் † "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச், சார்தரா சார்தரும் நோய்." என்னுந் திருவாக்கும் இக்கருத்தினை வலியுறுத்தும்.

மயக்கம் - பொருளின் நிலையாமையை அறியாமை.

நிதம் - நிலைபெறுதல். மனம்நிலைபெறுதற்கு திருவைந்தெழுத்தை விதிப்படி கணித்தலேயன்றிச் சிவாலயவழிபாடும் ஏற்றவழியாகும். இதனை, ¶"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சேநீவா நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்குப், புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப் பூமாலைபுனைந் தேத்திப் புகழ்ந்துபாடித், தலையாரக்கும்பிட்டுக் கூத்துமாடி சங்கராசய போற்றி போற்றியென்றும், அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதியென்றும் ஆரூரா என்றென்றே அலறாநில்லே." என்னும்திருவாக்கானுணர்க. (உஎ)

(அ - கை) மேற்கூறியவாறு மனத்தை நிலைபெறச்செய்து காப்பவரே நற்றவரெனக்கூறுகின்றார்.

28. பற்றினாற் சலிக்குமுள்ளம் பற்றாதே பண்ணிக்கொள்க
நிற்றலின் றெனினுந்தத்த நிலையினி னிறுத்திக்கொண்டால்
பெற்றன மென்றுபேணிப் பின்னைப் பேராமற்காக்கும்
நற்றவ ரன்றியிந்த வுலகினி னல்லோரியாரே.

(இ - ள்) பற்றினால் சலிக்கும் உள்ளம் - பொருள்களினிடத்து வைத்திருக்கும் பற்றினால் (சாதனத்தில் நின்றும் நழுவி) சலனத்தையடையும் மனம், பற்றாதேபண்ணிக்கொள்க - பொருள்களைப் பற்றாதவாறு செய்து கொள்க, நிற்றல் இன்று எனினும் - பற்றாது நிலைபெறவில்லையாயினும், தம்தம்நிலையினில் நிறுத்திக்கொண்டால் - தாம்தாம் அநுட்டிக்கும் சாதனத்தினிடத்து (மீண்டும்) மனத்தைச் செலுத்தி நிலைபெறச்செய்துகொள்க; அங்ஙனஞ் செய்துகொண்டால், பெற்றனம் என்றுபேணி - பெறுதற்கரிய இப்பேறைப்பெற்றோம் என்றுகருதி ஆதரவுடன், பின்னைபேராமல்காக்கும் நற்றவர் அன்றி இந்த உலகினில் நல்லோர்யாரே - மீண்டும் நழுவாமல்

† திருக்குறள். மெய்யுணர்தல், செ, கூ.
¶ திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்.

காப்பவரே நல்ல தவத்தையுடையவர்; அவரையின்றி இவ்வுலகத்தில் நன்மையுடையாராவர். ஒருவரும்இல்லை எ - று.

(பொ - ரை) பொருள்களினிடத்து வைத்திருக்கும் பற்றினால் (சாதனத்தில் நின்றும் நழுவி) சலனத்தையடையும் மனம், பொருள்களைப் பற்றாதவாறு செய்துகொள்க. பற்றாதுநிலைபெறவில்லையாயினும், தாம் தாம் அநுட்டிக்கும் சாதனத்தினிடத்து (மீண்டும்) மனத்தைச்செலுத்தி நிலைபெறச்செய்துகொள்க. அங்ஙனஞ் செய்துகொண்டால், பெறுதற்கரிய இப்பேறைப் பெற்றோமென்றுகருதி, ஆதரவுடன் மீண்டும் நழுவாமல் காப்பவரே நல்லதவத்தையுடையவர். அவரையின்றி இவ்வுலகத்தில் நன்மையுடையாராவர். ஒருவருமில்லை எ - று.

(க - ரை) பொருட்பற்றை நீக்குதலாலேனும், சாதனத்தில் உறைந்து நிற்றலாலேனும், மனத்தைச் சலனமின்றி நிலைபெறச் செய்துகொள்பவரே நற்றவர் என்பதாம்.

நிற்றல் இன்று எனினும் என்றவிடத்து, உம்மை நிற்றல்வேண்டும் என்னுங்கருத்தால் வந்த எதிர்மறை.

தத்தம் நிலை - தாம்தாம் அநுட்டிக்கும் சாதனம். செலுத்தியென்பது வருவித்துரைத்துக் கொள்க. பொருட்பற்று நீங்குதற்குச் சாதனத்தைப் பற்றவேணடுமென்பது. * "அப்பற்றைப் பற்றுக பற்றுவிடற்கு" என்பதனு மறியப்படும்.

காக்கும் நற்றவரன்றியென்னும் அநுவாதத்தால் காப்பவர்நற்றவரென்பது பெறப்பட்டது.

தவம், தத்தம் பலனைத்தந்து அழியுந் தவமென்றும், பலனைத்தந்து அழியாது மேற்றவத்திற் செலுத்துந் தவமென்றும் இரு வகைப்படும். அவற்றுள், முன்னையது வேதத்திற் கூறப்படும் வேள்விமுதலியன. பின்னையது ஆகமத்திற் கூறப்படும் சரியைமுதலியன. நன்மையெனப்படுவன எல்லாவற்றினும் சிறந்தது வீடுபேறு. அதனையடையச் செய்வது ஞானம். ஆதலின், ஞானத்தையுடையவரே இவ்விடத்துக்கூறப்பட்ட நற்றவராவர். இது, மேல் உ-வது செய்யுளுரையிலுங்கூறப்பட்டிருத்தல் காண்க. யாரே என்றவிடத்து ஏகாரம் அசை. (உஅ)

(அ - கை.) சிவனோடு பிரிப்பின்றி நிற்குந் தன்னையறிதலே மக்கட் பிறவியாலாய பயனெனக் கூறுகின்றார்.

29. பிறந்து பெற்றவற்வாற் பெறும் பயன்
நிறைந்த நீர்முகி னீங்கிய வானென

---

* திருக்குறள் துறவு. செ. ௰.

அறிந்து தன்னை யமல வியாபகம்
செறிந்து நல்லதி யானத் திருத்தலே.

(இ - ள்.) பிறந்து பெற்ற அறிவால் பெறும் பயன் - (மக்களாய்ப்) பிறந்தமையால் பெற்ற பகுத்தறிவால் பெறத்தகும் பயனாவது, அமலவியாபகம் செறிந்து தன்னை - நின்மலமான(சிதாகாசத்தால்) வியாபிக்கப்பட்டதன் உண்மையை, நிறைந்த நீர்முகில் நீங்கியவான் என அறிந்து - நிறைந்தநீரோடுங்கூடிய மேகம் நீங்கிய ஆகாயத்தைப்போல (மலமற்றஞானவெளியாக) அறிந்து, நல்லதியானத்து இருத்தலே - (அங்ஙனம் அறிந்ததனைமறவாத) நல்லதியானத்தில் நிலைபெற்றிருத்தலேயாம் எ - று.

(பொ - ரை.) (மக்களாய்ப்) பிறந்தமையால் பெற்ற பகுத்தறிவால் பெறத்தகும் பயனாவது, நின்மலமான சிதாகாசத்தால்வியாபிக்கப்பட்டதன் உண்மையை, நிறைந்த நீரோடுங்கூடிய மேகம்நீங்கிய ஆகாயத்தைப்போல (மலமற்றஞானவெளியாக) அறிந்து, (அங்ஙனம்அறிந்ததனைமறவாத) நல்லதியானத்தில் நிலைபெற்றிருத்தலேயாம் எ - று.

(க - ரை.) சிவனால்வியாபிக்கப்பட்ட தன்னைச், சிவனைப்போல் மலமற்ற ஞானவெளியாக அறிதலே மக்கட்பிறப்பினாலாயபயன் என்பதாம்.

பெற்றஅறிவால் என்றதனால் மக்களென்பது வருவிக்கப்பட்டது. பெற்றஅறிவு - கல்வியாற்பெற்றபகுத்தறிவு. கல்வியறிவாகியசெயற்கையறிவு மண்ணுலகத்தில் மக்கட்பிறவிக்கு மாத்திரந்தான் உள்ளது. கல்வியறிவால் இதுசெய்யத்தக்கது, இது செய்யத்தகாததுஎன்னும் பகுத்தறிவு உண்டாம். விலங்குமுதலிய ஏனைய பிறவிகட்கு அந்த அந்தப் பிறவிக்கேற்றவாறு அருந்தல் பொருந்தல் முதலியவற்றிற்குரிய இயற்கையறிவே யன்றிக் கல்வியறிவாகிய செயற்கையறிவும் அதனாலுண்டாம் பகுத்தறிவுங்கிடையா.

பிறந்துபெற்ற என்பது பிறந்தமையால் பெற்ற என்னும் பொருள் குறித்தது; மழைபெய்து குளம் நிறைந்தது என்றாற்போல.

நீர்முகில் நீங்கியவான் என்னும் உவமையால் மலமற்ற ஞானவெளியென்பது பெறப்பட்டது.

அமலவியாபகம் - சிதாகாசசொரூபமாகிய சிவம். சீவனுக்கும் வியாபிக்குந்தன்மை உண்டெனினும் மலத்தோடுகூடிய வியாபகமாதலின், அது, ஏகதேசவியாபகமெனப்படும். அதாவது, யாதானுமொன்றை மாத்திரம் வியாபிப்பது. இயல்பாகவே மலமில்லாதசிவனுடையவியாபகம் பூரணவியாபகமெனப்படும். அதாவது, எல்லாப் பொருள்களையும் எக்காலத்தும் வியாபிப்பது. எனவே, பெத்தநிலையினும் சீவன், சிவனால் வியாபிக்கப்பட்டிருக்குமென்பது பெறப்பட்டது. ஆயினும், மலமறைப்பால் அதுவிளங்காதாயிற்று. சாதனத்தால் மலம் நீங்கினபொழுது சிவனால் வியாபிக்கப்

பட்டிருத்தல் விளங்கித்தோன்றும். சார்ந்ததன் வண்ணமாந் தன்மையுடைய சீவன், அப்பொழுது சிவம்போலமலமற்றஞானவெளியாகத் தோன்றும். இக்கருத்துணர்த்துதற்கு அமலவியாபகஞ்செறிந்து தன்னைநீர்மூகில் நீங்கியவானெனை அறிந்து என்றார்.

செறிந்த என்பது செறிந்துஎனத்திரிந்தது. செறிதல் - வியாபித்தல்.

இவ்வாறு தன்னையறிந்தவன், மீளமறத்தலின்றித் தன்னையேஅறிந்து கொண்டிருத்தல் முறைமையென்பதறிவித்தற்குப் பயன்மேல் வைத்துக் கூறினார்.

துன்பத்துக்கும் நிலைபேறில்லாத இன்பத்துக்கும் ஏதுவான பொருள்களைத் தியானிக்கும் தியானம்போலன்றி, இது, என்றும் நிலைபேறுடைய இன்பத்திற்குஏதுவானசிவத்தியானமாதலின் நல்லதியானமெனப்பட்டது. ()

(அ - கை.) இருதயமுதலிய தானங்களைப்பற்றி நிற்கும் பற்றுக்களை விட்டுச் சிவனைப்பற்றி நிற்பவனே சிவயோகியாவனெனக் கூறுகின்றார்.

30. வளியென மறுகுஞ்சித்த நெஞ்சிலே மருவிநிற்கும்
தெளிவுற நடுவுகீழ்மேற் செலாவகை நிறுத்திக்கொண்டால்
ஒளியுறு முள்ளமொன்றும் பாவியா துறவேநோக்கி
எளியவப் பொருண்மேற் பற்றற்றிருப்பவன் யோகியாவான்.

(இ - ள்.) வளியெனமறுகும் சித்தம் - காற்றைப் போலச் சுழலும் மனத்தை, நடுவுகீழ்மேல் செலாவகை நிறுத்தி கொண்டால் - இருதயம் மூலாதாரம்பிரமரந்திரமாகிய தானங்களில்செல்லாதவாறு (தன்னிடத்தில்) நிலைபெறச் செய்துகொள்ளின், நெஞ்சில் மருவிநிற்கும் ஒளிதெளிவு உற உறும் - அம்மனத்தினுள்ளே பொருந்தியிருக்கும் ஒளிரூபமான சிவம்விளங்கித்தோன்றும், ஒன்றும் பாவியாது உறவேநோக்கி - (அங்ஙனம்தோன்றிய பின்னர்) வேறொன்றையும் சிந்தியாது அந்தச் சிவத்துடன் கலத்தலையே சிந்தித்து, எளிய அப்பொருள்மேல் பற்று அற்று இருப்பவன் யோகியாவான் - (அச்சிந்தனையின் முதிர்ச்சியால்) தனிமையான அந்தச்சிவப்பொருளினிடத்துள்ள பற்றும் அற்றுச் சிவமாயிருப்பவனே சிவயோகியாவன் எ - று.

(பொ - ரை.) காற்றைப்போலச் சுழலும் மனத்தை, இருதயம் மூலாதாரம் பிரமரந்திரமாகிய தானங்களில் செல்லாதவாறு தன்னிடத்தில் நிலைபெறச் செய்துகொள்ளின், அம்மனத்தினுள்ளே பொருந்தியிருக்கும் ஒளிரூபமான சிவம் விளங்கித் தோன்றும். அங்ஙனந் தோன்றிய பின்னர் வேறொன்றையுஞ் சிந்தியாது அந்தச்சிவத்துடன் கலத்தலையே சிந்தித்து, அச்சிந்தனையின் முதிர்ச்சியால் தனிமையான அந்தச் சிவப்பொருளினிடத்துள்ள பற்றும் அற்றுச் சிவமாயிருப்பவனே சிவயோகியாவன் எ - று.

அக்கருத்துப் பற்றிப் பயன்றராதெனை இங்கே கூறினர். சித்த சுத்திவாயி லாய் ஞானத்தைத் தோற்றுவித்து அதன் வாயிலாய்ச் சீவன் முத்தியைத் தருமாதலின், அக்கருத்துப்பற்றிச் சீவன் முத்தியைத்தருமெனப் புராணங் கூறிற்று. ஆகையால் புராணக் கூற்றுப் பொய்யென இகழப் படாமை காண்க. ஏனையவும் இவ்வாறே கொள்ளப்படும்.

ஈற்றிலுள்ள ஏகாரம் - அசை. (ருo)

(அ - கை.) சீவன் முத்தியை விரும்பும் ஞானசாதகனுக்கு அட்டமி முதலிய விரத ஒழுக்கம் வேண்டா மெனக் கூறுகின்றார்.

51. தன்மமு மதன்மமுந் தன்னைச் சார்கிலா
என்னிலட் டமிமுதல் விரத மென்செய
மன்னிய வுலகினி லொழுக்கமு மற்றுள
கன்மமும் விடுதலே கருமங் காண்கிலே.

(இ - ள்.) தன்னை தன்மமும் அதன்மமும் சார்கு இலா என்னில் - ஆன்மாவாகிய தன்னை நல்வினையும் தீவினையும் பொருந்தா ஆதலின், உலகினில் மன்னிய - உலகத்தினிடத்துப் பொருந்தியிருக்கின்ற, அட்டமிவிரத முதல் ஒழுக்கம் - அட்டமிவிரத முதலிய நல்வினைகளும், மற்றுள கன்மமும் - ஏனைய தீவினைகளும், என்செய - எதற்காகச் செய்யவேண்டும், காண்கில் - ஆராயுமிடத்து, விடுதலே கருமம் - அவற்றை விடுதலே செய்யத்தக்கது எ - று.

(பொ - ரை.) ஆன்மாவாகிய தன்னை நல்வினையும் தீவினையும் பொருந்தா ஆதலின், உலகத்தினிடத்துப் பொருந்தியிருக்கின்ற அட்டமி விரதம் முதலிய நல்வினைகளும், ஏனைய தீவினைகளும் எதற்காகச் செய்ய வேண்டும். ஆராயுமிடத்து அவற்றை விடுதலே செய்யத்தக்கது எ - று.

(சு - ரை.) ஞானசாதகன் உலக சம்பந்தமான செயல்களனைத்தையும் விடுதலே செய்யத் தக்கது என்பதாம்.

நல்வினைகள் தீவினைகள் செய்த வுயிரைச்சார்ந்து இன்ப துன்பமாகிய பலன்களைத் தருமென்பது, * "இதமகிதங்களெல்லாம் இறைவனே ஏற்றுக் கொண்டிங் - கிதமகிதத்தாலின்பத் துன்பங்களீவன்" என்வும், ¶ "தன்ம மோட தன்மமாகித்தானிருபயனுந்தந்து" எனவும் கூறப்பட்ட திருவாக்குக் களானும் பிறவாற்றானும் பெறப்படும். அவ்வாறாகவும், தன்மமும் அதன்மமும் தன்னைச் சார்கிலா என்றதன் கருத்தென்னை யெனின், கூறுதும்.

---

* சிவஞான சித்தியார் உ-ம். சூ-ம். செ. கூ.

¶ ஷை. ஷை. செ. ௩௧.

உயிருக்குப் பொதுநிலை தனிநிலை யென இருநிலைகளுண்டு. அவற்றுள், பொதுநிலையாவது - தனுகரண புவனபோகங்களோடு கூடி நிற்குநிலை. தனி நிலையாவது - அவற்றுடன் கூடாது நிற்கும் நிலை. பொது நிலை, சகலாவத்தை யெனப்படும். இந்நிலையிற்றான் வினை செய்தலும் அதன் பலனை யநுபவித்தலும் கூடும். இதனை, ‡ "உலகுடல் கரணங் காலமுறு பல நியதி செய்தி - பலவினைவு கொண்டு கன்மம் பண்ணுவதுண்பதானல்" என்னுந் திருவாக்கானறிக. இனி, தனிநிலை, சுத்தாவத்தை யெனப்படும். இது, சாதனநிலை அநுபவநிலை யென இருவகைப்படும். அவற்றுள், உடல் யான் அன்று கருவிகள் என்னுடையன அல்ல எனவும், சிவன் நான் எனவும் சிந்திக்கும் நிலை சாதன நிலை. சிவனோடு பிரிப்பின்றி நிற்கும் தன் உண்மை நிலை விளங்கித் தோன்றச் சிவனாய் நிற்கும் சீவன் முத்தநிலை அநுபவநிலை. சாதகனுக்கு நல்வினை தீவினைகள் சீவன் முத்திப் பயன்றருதற்குச் சாதனமாகாமை பற்றியும், சிவமாய் விளங்கும் சீவன் முத்தனுக்குச் சிவத் தோற்றம் ஒன்றேயன்றி, உடற்றோற்ற முதலியன இல்லாமை பற்றியும், "தன்மமும் அதன்மமும் தன்னைச் சார்கிலா" என்றனர். இக்கருத்துப் பற்றியே, வினைப்பலன் செய்த உயிரைச் சாருமென்ற ஸ்ரீ அருணந்தி சிவாசாரியர், சாதன இயலுள், "0 ஞாலமதின் ஞான நிட்டை யுடையோருக்கு நன்மையொடு தீமையிலை நாடுவதொன்றில்லை - சீலமிலை தவமில்லை விரதமோடாச்சிரமச் செயலில்லை தியானமிலை சித்தமலமில்லை - கோலமிலை புலனில்லை கரணமில்லை குணமில்லை குறியில்லை குலமுமில்லை" என்றருளிச் செய்தனர்.

என்செய என்றவிடத்து வேண்டு மென்னும் ஒரு சொல் வருவித்துரைத்துக்கொள்க.

மற்று - நல்வினையைக் கூறி தீவினையைக் கூறுதற்கு இடையே நிற்றலால் வினைமாற்று.

கன்மம் - இவ்விடத்துத் தீவினையைக் குறித்தது. † வினைப் பகை என்ற விடத்துப் போல.

கருமம் - செயல். ஈற்றிலுள்ள ஏகாரம் - அசை. (௩௪)

(அ - கை.) சமயா சார முதலியவற்றை விடுதலே ஞானசார மெனக் கூறுகின்றார்.

---

‡ சிவஞானசித்தியார் உ-ம். சூ-ம். செ. ௨௨.

0 சிவஞானசித்தியார் அ-ம் சூ-ம். செ. ௬௨.

† திருக்குறள் தீவினையச்சம் செ. எ.

52. சமயா சார சங்கற்ப விகற்பமும்
அமையா தாங்குல வாசார மானதும்
இமையா தாரும் விடாதவில் வாழ்க்கையும்
அமையார் தோளாய் விடுதலா சாரமே.

(இ - ள்.) அமை ஆர்தோள் ஆய் - மூங்கில் போலுந் தோள்களை உடையவளே, சமய ஆசார சங்கற்ப விகற்பமும் - சமய ஒழுக்கம் வேண்டுமென்று எண்ணுதலும் வேண்டுமோ வேண்டாமோ என்று ஐயுறுதலும், அமையாது ஆம்குல ஆசாரம் ஆனதும் - இன்றியமையாததானகுல ஒழுக்கமென்பதும், இமையாதாரும் விடாத இல்வாழ்க்கையும் - இமையா நாட்டத்தையுடைய தேவர்களும் விடாத இல்வாழ்க்கையும், விடுதலே ஆசாரம் - விடுதலே ஞான சாதகனது ஒழுக்கமாகும் எ - று.

(பொ - ரை.) மூங்கில் போலுந் தோள்களை உடையவளே! சமய ஒழுக்கம் வேண்டு மென்று எண்ணுதலும், வேண்டுமோ வேண்டாமோ என்று ஐயுறுதலும், இன்றியமையாததான குல ஒழுக்க மென்பதும், இமையா நாட்டத்தை உடையதேவர்களும் விடாத இல்வாழ்க்கையும் விடுதலே ஞான சாதகனது ஒழுக்கமாகும் எ - று.

(க - ரை.) சமய ஒழுக்கம் முதலியவற்றின் பற்றுவிடுதலே ஞான ஒழுக்கம் என்பதாம்.

சங்கற்பம் - எண்ணுதல்.

விகற்பம் - ஐயுறுதல்.

சமய ஒழுக்கத்திற்றவறின், பலனிழத்தலே யன்றித் தாழ்ந்த சமயத்தவனாதலில்லை. குல ஒழுக்கத்திற்றவரின் இழிந்த பிறப்பினனாவன். ஆதலின், குலவொழுக்கம்இன்றியமையாதது என்னும் விசேடணங்கொடுத்துக் கூறப்பட்டது. * "ஒழுக்க முடைமை குடிமை யிழுக்கம் இழிந்த பிறப்பாய் விடும்" என்னுந் திருக்குறள் இக்கருத்தினை வலியுறுத்தும். (ருஉ)

(அ - கை.) சித்தி முதலிய அனைத்தும் துன்பத்திற் கேதுவாய்ச் சிற்றின்பத்தைத் தருமாதலின், அவற்றை ஞானசாதகன் விரும்பான் எனக் கூறுகின்றார்.

53. பல்வகைய சித்திகளும் பாதாளத் திற்செலவும்
சொல்லரிய பொருண்முழுதுஞ் சோராமற் பெற்றிடினும்
எல்லையிலா வின்பமா முத்திபெற வெண்ணுமவன்
அல்லறருஞ் சிற்றின்ப மடைய வவாவொழிவான்.

---

* திருக்குறள் ஒழுக்கமுடைமை செ. ரு.

(இ - ள்.) பல்வகைய சித்திகளும் - அணிமா முதலிய அட்ட சித்திகளும், பாதாளத்தில் செலவும் - பூமியின் கீழே உள்ள பாதாள வுலகங்களிற் செல்லும் திறனும், சொல்ல அரிய பொருள் முழுதும் - அளவிடுதற்கரிய பொருள்கள் அனைத்தும், சோராமல் பெற்றிடினும் - குறைவறப் பெற்றகாலத்தும், அல்லல்தரும் - அவை துன்பத்தைத்தருதற்கு ஏதுவாய, சிற்றின்பம் - வரம்புக்குட்பட்டு அழியும் சிறிய இன்பத்தை தரும் ஆகையால், எல்லையிலா இன்பமாம் முத்திபெற எண்ணும் அவன் - வரம்பிலின்பமாகிய முத்தியை அடைய விரும்பும் ஞான சாதகன், அடைய அவா ஒழிவான் - அவற்றை அடைதற்கு விரும்பமாட்டான் எ - று.

(பொ - ரை.) அணிமா முதலிய அட்ட சித்திகளும், பூமியின் கீழே உள்ள பாதாளவுலகங்களிற் செல்லுந்திறனும், அளவிடுதற்கரிய பொருள்கள் அனைத்தும் குறைவறப் பெற்ற காலத்தும், அவை துன்பத்தைத் தருதற்கு ஏதுவாய வரம்புக்குட்பட்டு அழியும் சிறிய இன்பத்தைத் தரும் ஆகையால், வரம்பிலின்பமாகிய முத்தியை அடைய விரும்பும் ஞான சாதகன், அவற்றை அடைதற்கு விரும்பமாட்டான் எ - று.

(க - ரை.) பேரின்பமாகிய முத்தியை விரும்பும் ஞான சாதகன், சிற்றின்பத்தைத்தரும் சித்தி முதலியவற்றை விரும்பான் என்பதாம்.

அட்டசித்திகளின் பெயரும் சித்தியின்றிறனும் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம் அட்டமா சித்தி உபதேசித்த படலத்தில் விரிவாய்க் கூறப்பட்டிருத்தலால் அவ்விடத்துக் காண்க.

“எம்மை யுணர்ந்த யோகியர்கள் இவற்றை விரும்பார்” என அவர் கூறியவாற்றானும் ஞான சாதகன் விரும்பான் என்பது பெறப்படும்.

பாதாள வுலகங்கட்குச் செல்லுந்திறன், எட்டுத் திக்குக்களிலும் ஆகாயத்திலும் செல்லுந் திறனிலும் மேலானது.

சித்தி முதலியவற்றா லுண்டாகும் இன்பம் நிலைபேறின்றி அழிந்து பின் துன்பத்தைத் தருதற்கு ஏதுவாமாதலின், அக்கருத்துத் தோன்ற, அல்லல் தரும் என்பது பெயரெச்சமாய் நின்று சிற்றின்பம் என்னும் ஏதுப் பெயர் கொண்டது. (ருங)

(அ - கை.) அட்டமாசித்தி முதலிய அனைத்தும் முத்தியைத் தாரா எனக் கூறுகின்றார்.

54. அட்டமா சித்திமுத லனைத்துள்ள பேறுக்களும்
கட்டமாங் கதிகடரும் பரகதிகா ணக்கொடா
மட்டுலா மாலையாய் வியாபகமா யறிவாகிக்
கிட்டலா காமுத்தி மற்றிவற்றாற் கிடையாதே.

(இ - ள்.) மட்டு உலாம் மாலையாய் - தேன்பொருந்திய மலர்மாலையை யுடையவனே! அட்டமாசித்தி முதல் அனைத்து உள்ளபேறுகளும் - அட்டமாசித்தி முதலாகக் கூறப்படும் எல்லாப்பேறுகளும், கட்டமாம் கதிகள் தரும் - பிறந்திறந்துழலுந் துன்பமாகிய நிலைகளைத்தரும், பரகதிகாண கொடா - இவற்றிற்கு மேலான நிலையை அடையச் செய்யா, வியாபகமாய் அறிவாகி கிட்டலாகாமுத்தி இவற்றால்கிடையாது - எங்கும் நிறைந்ததாயும் அறிவாயும் எளிதில் அடைதற்கு முடியாததாயும் உள்ள முத்தியை இவற்றால் அடைய முடியாது எ - று.

(பொ - ரை.) தேன் பொருந்திய மலர் மாலையை உடையவனே! அட்டமாசித்தி முதலாகக் கூறப்படும் எல்லாப்பேறுகளும், பிறந்திறந்துழலுந் துன்பமாகிய நிலைகளைத்தரும்; இவற்றிற்கு மேலான நிலையை அடையச் செய்யா. எங்கும் நிறைந்ததாயும் அறிவாயும் எளிதில் அடைதற்கு முடியாததாயும் உள்ள முத்தியை இவற்றால் அடைய முடியாது எ - று.

(க - ரை.) சித்தி முதலியன பிறப் பிறப்புக்களைத் தருமேயன்றி முத்தியைத்தாரா என்பதாம்.

சித்தி முதலியவற்றால் முத்தி கிடையாதென்பது கூறுதற்பொருட்டு, மேலைச் செய்யுளிற் கூறப்பட்டதை அநுவதித்தார். கஷ்டம் என்பது கட்டம் எனத் திரிந்தது.

மற்று. ஏ. இரண்டும் அசை. (ருச)

(அ - கை.) ஞானசாதகன் விடயம் முதலியவற்றில் தனக்கு விருப்பம் உண்டாயின் அவ்விருப்பத்தைத் தடுத்துக்கொள்வான் எனக் கூறுகின்றார்.

55. யாதொரு விடயந் தன்னா லவத்தையை யெய்தினாலும்
காதலால் யோகந் தன்னைக் கருதுவான் பிறிதோர் தேசம்
தீதிலாப் பீடந் தன்னிற் சிறப்புடைத் தெனினுஞ் சித்தத்
தாதர வடையு மாசை யடையாம லாக்கிக் கொள்வான்.

(இ - ள்.) காதலால் யோகம் தன்னை கருதுவான் - விருப்பத்துடன் சிவயோகத்தை அநுட்டிப்பவன், யாது ஒரு விடயம் தன்னால் அவத்தையை எய்தினாலும் - யாதானும் ஒரு விடயங்காரணமாக சலனத்தை அடைந்த காலத்தும், பிறிதோர் தேசம் தீதிலாப்பீடம் தன்னில் சிறப்பு உடைத்து எனினும் - மற்றொரு இடமும் குற்றமில்லாத மற்றொரு ஆதனமும் தானிருக்குமிடத்திலும் ஆதனத்திலும் சிறப்பினை உடையதாகக் காணப்படினும், சித்தத்து ஆதரவு அடையும் ஆசை அடையாமல் ஆக்கி கொள்வான் -

மனத்தின்கண் விருப்பத்தாலுண்டாகும் ஆசை உண்டாகாதவாறு செய்து கொள்வான் எ - று.

(பொ - ரை.) விருப்பத்துடன் சிவயோகத்தை அநுட்டிப்பவன், யாதானும் ஒரு விடயம் காரணமாக சலனத்தை அடைந்த காலத்தும், மற்றொரு இடமும் குற்றமில்லாத மற்றொரு ஆதனமும் தானிருக்குமிடத்திலும் ஆதனத்திலும் சிறப்பினை உடையதாகக் காணப்படினும், மனத்தின்கண் விருப்பத்தாலுண்டாகும் ஆசை உண்டாகாதவாறு செய்துகொள்வான் எ - று.

(க - ரை.) ஞான சாதகன், விடயம் முதலியவற்றைப் பற்றி மனத்தினிடத்து விருப்பத்தா லுண்டாகும் ஆசையைத் தடுத்துக்கொள்வான் என்பதாம்.

தேசம் பீடம் முதலிய அனைத்தும் அறியப்படும் விடயமே எனினும், அவத்தைக் கேதுவான சத்தம் பரிசம் ரூபம் இரதம் கந்தமென்பனவற்றை விடயமென வேறு பிரித்துக் கூறினரென அறிக.

அவத்தை - இவ்விடத்து சலனமடையும் நிலையைக் குறித்தது. சலனமாவது - வேண்டாமென்று விட்ட விடயத்தை ஆசையினால் மீண்டும் பொருந்த எண்ணிச் சாதனத்தில் நின்றும் நழுவுதல்.

யோகந் தன்னை என்றவிடத்து, தன் - ஆசை.

கருதுவான் - பெயர்.

ஆதரவு - விருப்பம். அஃதாவது இது எனக்கு வேண்டுமென்று எண்ணுதல். அவா, விருப்பம் என்பன ஒருபொருட் சொற்கள். அவ்விடத்து ஆலுருபு விரித்துரைக்க.

ஆசை - விரும்பப்பட்ட பொருளைப் பெறுதற்கான வழியை நாடுதல். இக்கருத்தினை, † எனக்கிது வேண்டுமென்னும் அவாவும், அது பற்றி அப்பொருட்கட் செல்லும் ஆசையும் எனப் பரிமேலழகர் கூறுமாற்றானும் அறிக. (ருரு)

(அ - கை.) ஞானசாதகன் தாவரம் ஊர்வன முதலாகவுள்ள எல்லாவுயிர்களிடத்தும் கிருபை உடையனாயிருக்க வேண்டுமெனக் கூறுகின்றார்.

56. அளியமர் குழலாய்வீட்டை யடையவே கருது நல்லோர்
நெளிவன பறப்ப வூர்வ நிற்பன முதலவாகிக்
களியுடை யுயிர்க்குத் துன்பங் காண்கிலா வாழ்க்கையானு
லளியினா லருளையென்று மாக்குவ தழகி தாமால்.

---

† திருக்குறள் மெய்யுணர்தல். செ. ௭௦.

(இ - ள்.) அளி அமர்குழலாய் - (இயற்கை மணம் உடைமையால்) வண்டுகள் விரும்பி மொய்க்கும் கூந்தலை உடையவளே! நெளிவன பறப்ப ஊர்வ நிற்பன முதல ஆகி - நெளிவனவாகிய புழுமுதலியனவும் பறவையும் ஊர்வனவும் நிற்பனவாகிய தாவரங்களும் முதலியனவாய், களி உடை உயிர்க்கு - (தத்தம் பிறவியில்) மகிழ்ச்சியினை உடைய உயிர்கட்கு, துன்பம் காண்கிலா வாழ்க்கை ஆனால் - துன்பம் செய்யாமை இல்வாழ்க்கையாகும் ஆயின், வீட்டையேஅடைய கருதும் நல்லோர் - முத்தியினையே அடைய விரும்பும் ஞான சாதகர்கள், என்றும் அளியினால் அருளை ஆக்குவது அழகிது ஆம் - எக்காலத்தும் அன்பினால் உயிர்களிடத்துக் கிருபை வைப்பது சிறப்பாகும் எ - று.

(பொ - ரை.) இயற்கை மணம் உடைமையால் வண்டுகள் விரும்பி மொய்க்குங் கூந்தலை உடையவளே! நெளிவனவாகிய புழுமுதலியனவும் பறவையும், ஊர்வனவும், நிற்பனவாகிய தாவரங்களும் முதலியனவாய்த்தத்தம் பிறவியில் மகிழ்ச்சியினை உடைய உயிர்கட்குத் துன்பம் செய்யாமை இல்வாழ்க்கையாகுமாயின், முத்தியினையே அடைய விரும்பும் ஞானசாதகர்கள், எக்காலத்தும் அன்பினால் உயிர்களிடத்துக் கிருபைவைப்பது சிறப்பாகும் எ - று.

(க - ரை.) ஞானசாதகன், உயிர்களிடத்து எக்காலத்தும் அன்பினால் கிருபை உடையவனாக இருக்கவேண்டும் என்பதாம்.

முதல என்றதனால் மிருகம் நீர்வாழ்வன மனிதர் என்பனவுங் கொள்ளப்படும்.

ஒவ்வொரு உயிரும் தான் தங்குதற்கு இடனாயிருக்கும் உடலை விட்டு நீங்குதற்கு விருப்பமில்லாமல் அவ்வுடல் நீங்குங் காலத்து வருந்துதலாலும், எவ்வித இடையூறும் பொருந்த விரும்பாமையாலும், தத்தம் பிறவியில் மகிழ்ச்சியினை உடையதென்பது பெறப்படுமாறு காண்க.

காண்கிலா என்றவிடத்துமை விகுதி தொக்குநின்றது.

காண்குதல் - செய்தலென்னும் பொருள் குறித்தது.

வாழ்க்கை யென்பது அடையடுக்காது நின்றமையால், இல்வாழ்க்கையினைக் குறிக்கும். இது, வாழ்க்கைத் துணைநலம் என்னும் திருக்குறள் அதிகாரப் பெயரானும் அறியப்படும்.

இல்வாழ்க்கை யென்பது எவ்வுயிரிடத்தும் அன்புடைமையை முதன்மையாகக் கொண்டு நிகழுமென்பது பற்றியே, திருக்குறளில் இல்லற இயலுள் அன்புடைமை முதலாவதாகக் கூறப்பட்டது. தாவரங்களை உணவாகக் கொள்ளினும், பிரமயாகம், தேவயாகம், மானுடயாகம், பிதிர்யாகம், பூதயாகம் என்னும் ஐவகையாகங்கள் இல்வாழ்வார்க்கு விதிக்கப்பட்டமை

பற்றி, தாவரவுயிருக்கும் துன்பஞ் செய்யாமையே இல்வாழ்வார்க்குக் கருத்தென்பது பெறப்படும். தீவினையச்சம் என்னும் அதிகாரம் இல்லற இயலுள் திருக்குறளில் வைக்கப்பட்டமையால் இக்கருத்து வலியுறுத்தப்படும். ஆயினும் இல்வாழ்வார்க்குத் தாவர வுணவு இன்றியமையாதென்னுங் கருத்துப் பற்றி இன்னா செய்யாமை, கொல்லாமை, புலால் மறுத்தல் என்னும் அதிகாரங்கள் துறவற இயலுள் வைக்கப்பட்டன.

ஆனால் என்பது தெளிவின்கண் வந்தது; * "அச்செயலானால்" என்றவிடத்துப் போல.

அளி - அன்பு. அருள், அன்பு காரணமாக நிகழுமாதலின், அளியினால் அருளையாக்குவது என்றார்.

ஈற்றிலுள்ள ஆல் - அசை. (ருசா)

(அ - கை.) ஞானசாதகன் சிவபூசை செய்யும் முறையைக் கூறுகின்றார்.

57. நடுங்காம லெவ்வுயிரு நறுக்காமற் றுரும்பனைத்தும்
பிடுங்காது முதலெவையும் பிரசமலர் கொய்யாது
விடுங்காலா லுழ்த்துதிர்ந்த விரைமலர்க ளவையேந்தி
அடுங்காலன் றனையட்ட வம்புயங்க ளருச்சிப்பான்.

(இ - ள்.) எவ்வுயிரும்நடுங்காமல் - ஒருயிருக்கும்அச்சந்தரும் செயலைச் செய்யாமல், துரும்பு அனைத்தும் நறுக்காமல் - துரும்புகளைக் கிள்ளாமல், முதல் எவையும் பிடுங்காமல் - வேர்தளைகளைப் பிடுங்காமல், பிரசமலர் கொய்யாது - தேன் பொருந்திய மலரைப் பறியாமல், ஊழ்த்துவிடும் காலால் உதிர்ந்த - மலர்ந்து வீசுங் காற்றால் உதிர்ந்த, விரைமலர்கள் அவை ஏந்தி - மணமுள்ள மலர்களை யெடுத்து, அடும் காலன்தனை அட்ட அம்புயங்கள் அருச்சிப்பான் - உயிர்களைக்கொல்லுங் காலனைக் கொன்ற சிவபெருமானது தாமரை மலர்போலும் திருவடிகளைப் பூசிப்பான் எ - று.

(பொ - ரை.) ஒருயிருக்கும் அச்சந்தரும் செயலைச் செய்யாமல், துரும்புகளைக் கிள்ளாமல், வேர் தளைகளைப்பிடுங்காமல், தேன் பொருந்திய மலரைப் பறியாமல், மலர்ந்து வீசுங்காற்றால் உதிர்ந்த மணமுள்ள மலர்களை யெடுத்து, உயிர்களைக் கொல்லுங் காலனைக் கொன்ற சிவபெருமானது தாமரை மலர்போலுந் திருவடிகளைப் பூசிப்பான் எ - று.

(க - ரை.) ஞானசாதகன், உதிர்ந்த மலர்களை யெடுத்துச் சிவபூசை செய்வன் என்பதாம்.

---

* சிவஞான சித்தியார் உ-ம் சூ-ம். செ. கக.

இவ்வாசாரம் முடியும்வரை ஞான சாதகன் என்னும்எழுவாய் அதிகாரத்தால் வருவித்து உரைத்துக்கொள்க.

துரும்பு - அறுகு முதலியன.

வேர் - விலாமிச்சை முதலியன.

தளை - மரு முதலியன.

உதிர்ந்த மலரை எடுத்துப் பூசிக்கவேண்டும்; செடியிலுள்ள மலரைப் பறித்துப் பூசித்தல் கூடாதென்று கூறும் முறையில் பூசைக்கு உபயோகமான புல் முதலியவற்றைக் கிள்ளுதல் பிடுங்குதல் கூடா தென்பதையும் உடன் கூறினர்.

பிடுங்காது கொய்யாது என்பன அவ்வத் தொழில் மேல் நின்றன.

அம்புயங்கள் - தாமரை மலர் போலுந்திருவடிகளைக் குறித்தது.

ஞானசாதகன், புறத்தே சிவபூசை செய்யவிரும்பின், உதிர்ந்த மலரை எடுத்துப் பூசிக்கவேண்டுமென்னும் இக்கருத்துப் பற்றியே ‡ "புறம்பேயும் அரன்கழல்கள் பூசிக்க வேண்டின் பூமரத்தின் கீழுதிர்ந்தபோதுகளும் கொண்டு.........போற்றி" என ஸ்ரீ அருணந்திசிவாசாரியர் அருளிச் செய்வாராயினர்.

அவ்வாறாயின், * "அருப்போடு மலர் பறித்திட்டுண்ணு மூரும்" எனவும், "உண்பதன் முன் மலர் பறித்திட்டுண்ணாராகில்" எனவும் ஸ்ரீ அப்பர் சுவாமிகளும், இக்கருத்துத் தோன்ற வண்டு தேனை உண்பதன் முன் மலரைப் பறித்துப் பூசிக்கவேண்டு மென்று புட்பவிதி கூறும் நூல்களும் கூறிய கருத்தென்னை யெனின், கூறுதும்:—

இறைவனை வழிபடும் முறை ஞானம் கிரியை என இருவகைப்படும். இவ்விரண்டும் அன்பின்றிச் செய்யப்படுமாயின் பயன்றரமாட்டா. ஆயினும், மந்ததரம், மந்தம் என்னும் அன்புடன் கிரியா வழிபாடு நிகழும். தீவிரம், தீவிரதரம் என்னும் அன்புடன் ஞானவழிபாடு நிகழும். ஆகையால் அன்பு வழிபாடு எனத் தனித்துக் கூற வேண்டுவதில்லை. ஆயினும் ஞான வழிபாட்டில் அன்பு மேம்பட்டுத் தோன்றும். கிரியாவழி பாட்டில் அன்பு உட்பட்டுத் தோன்றும்.

ஞான வழிபாட்டில் காயமே கோயில்; ஆன்மாவே லிங்கம்; மனமே வேலை செய்யும் அடிமை; மனத்தின்க ணிகழும் வாய்மையே திருவலகிடுதல் முதலியவற்று லுண்டாந் தூய்மை; நிறைந்த நேயமே (தீவிரதர அன்பே) நெய்யும் பாலுமாய்ப் பொருந்த அபிசேகித்தலாகும்.

---

‡ சிவஞான சித்தியார் கூ-ம் சூ-ம். செ. கக.

* தேவாரம். பொது.

கிரியா வழிபாட்டில் கோயில் முதலிய அனைத்தும் புறத்தூக் காணப் படுவனவாம்.

ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள், ‡ "காயமே கோயிலாகக் கடிமனமடி மையாக - வாய்மையே தூய்மையாக மனமணியிலிங்கமாக - நேயமே நெய்யும் பாலா நிறையநீ ரமைய வாட்டிப் - பூசனை யீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே" என ஞானவழிபாட்டையும், 0 "நிலைபெறுமா றெண்ணுதியேனெஞ்சே நீவா நித்தலு மெம்பிரானுடைய கோயில்புக்குப் - புலர்வதன் முன்னலகிட்டு மெழுக்குமிட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித் - தலையாரக்கும்பிட்டுக் கூத்துமாடி சங்கராசய போற்றி போற்றி யென்றும் - அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீயென்றுமாரூரா வென்றென்றே அலரா நில்லே". எனக்கிரியா வழிபாட்டின் பகுதியாகிய சரியாவழிபாட்டினையும் கூறி, மேற்கூறியவாறு மலர்பறித்து வழிபடுதலைக் கிரியா வழிபாடாகக் கூறியருளினர். சரியாவழிபாடு கிரியாவழிபாட்டின் பகுதியாயவாறு போல, யோகவழிபாடு ஞானவழிபாட்டின் பகுதியதாகும். இந்தயோக வழிபாடு ¶ "உடம்பெனு மனையகத்து வுள்ளமேதகழியாக - மடம்படு முணர் நெய்யட்டி உயிரெனுந் திரிமயக்கி - யிடம்படுஞானத் தீயா லெரிகொள இருந்து நோக்கில் - கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே" என அருளிச் செய்யப்பட்டது.

ஆகவே, ஞானவழிபாடு செய்பவன் புறத்துப்பூசைசெய்யின், உதிர்ந்த மலரை யெடுத்துப் பூசிக்கவேண்டு மெனவும், கிரியாவழிபாடு செய்பவன் மலரைப் பறித்துப் பூசை செய்யவேண்டுமெனவும், புட்பவிதியும் கிரியா வழிபாடு பற்றிக் கூறப்பட்ட தெனவும் அறிந்துகொள்க. (ருஎ)

(அ - கை.) ஞானசாதகன், மாரணம் முதலியவற்றை விரும்புதல் கூடாதெனக் கூறுகின்றார்.

58. பிணக்கந் தம்பனை பேர்த்த லுயிர்க்கொலை
இணக்கம் பூத பசாசுவெப் பேற்றுதல்
புணர்க்கு வசியம் போனார்வ ரன்மையல்
வணக்கந் தாவரங் குத்திர மாற்றுவான்.

(இ - ள்.) பிணக்கம் - பகைக்கும்படி செய்தலாகிய வித்துவேடணமும், தம்பனை - கட்டுதலாகிய தம்பனமும், பேர்த்தல் - விலக்குதல் ஏவுதலாகிய உச்சாடனமும், உயிர்க்கொலை - மந்திரத்தால் கொல்லுதலாகிய மாரணமும், பூத பசாசு இணக்கம் வெப்பேற்றுதல் - பூதபசாசுகள் ஆவேச

‡ தேவாரம். பொது. திருநேரிசை.
0 ஷை திருவாரூர். தாண்டகம்.
¶ ஷை பொது. திருநேரிசை.

மாகும்படி செய்தலும் சுரநோய் பொருந்தச் செய்தலுமாகிய பேதனமும், புணர்க்குமையல் - புணர்ச்சி செய்வதற்கு மயக்குதலாகிய மோகனமும், வசியம் வணக்கம் - வசப்பட்டு வணங்கச் செய்தலாகிய வசியமும், போனர் வரல் தாவரம் - போனவரை வரச் செய்து மீட்டும் போகாதவாறு நிலைக்கச் செய்தலாகிய ஆகருடணமும் ஆகிய, குத்திரம் மாற்றுவான் - வஞ்சகச் செயல்களை ஞான சாதகன் விரும்பான் எ - று.

(பொ - ரை.) பகைக்கும்படி செய்தலாகிய வித்து வேடணமும், கட்டுதலாகிய தம்பனமும், விலக்குதல் ஏவுதலாகிய உச்சாடனமும், மந்திரத்தால் கொல்லுதலாகிய மாரணமும், பூத பசாசுகள் ஆவேச மாகும்படி செய்தலும் சுரநோய் பொருந்தச் செய்தலுமாகிய பேதனமும், புணர்ச்சி செய்வதற்கு மயக்குதலாகிய மோகனமும், வசப்பட்டு வணங்கச் செய்தலாகிய வசியமும், போனவரை வரச் செய்து மீட்டும் போகாதவாறு நிலைக்கச் செய்தலாகிய ஆகருடணமும் ஆகிய வஞ்சகச் செயல்களை ஞானசாதகன் விரும்பான் எ - று.

(க - ரை.) ஞானசாதகன், வஞ்சகத் தொழிலாகிய அட்ட கருமங்களைச் செய்யான் என்பதாம்.

புணர் - முதனிலைத் தொழிற்பெயர். கு - வேற்றுமை உருபு.

தாவரம் - நிலைத்தல்.

குத்திரம் - வஞ்சகம். (டுஅ)

(அ - கை.) ஞானசாதகன், விருப்புவெறுப்பின்றிச்சமநிலையில் நிற்பன் எனக் கூறுகின்றார்.

59. ஆசையினை யறவிட்டெப் பொருட்குமொத்துச் சுகதுக்கம்
பேசியநட் டார்பகைஞர் பீடுடையோர் பீடில்லோர்
மாசிலொளி வளருமணி காஞ்சனங் கல்லோட்டினினும்
நேசமறப் பார்த்துணர்ந்து சமநிலத்தே நிலைநிற்பான்.

(இ - ள்.) சுகதுக்கம் - சுகத்தினிடத்தும் துக்கத்தினிடத்தும், பேசியநட்டார் பகைஞர் - கலந்து உரையாடும் நண்பரிடத்தும் பகைவரிடத்தும், பீடுடையோர் பீடு இல்லோர் - பெருமையுடையாரிடத்தும் பெருமையில்லாதாரிடத்தும், மாசு இல் ஒளிவளரும் மணி - குற்றமில்லாத ஒளிமேம்பட்டிருக்கும் இரத்தினங்களினிடத்தும், காஞ்சனம் - பொன்னினிடத்தும், கல்-கல்லினிடத்தும், ஓட்டினினும்-ஓட்டினிடத்தும், நேசம் அற ஆசையினை அறவிட்டு - விருப்பமின்மையால் ஆசையைமுற்றும்ஒழித்து, ஒத்து பார்த்து உணர்ந்து - ஒத்தகருத்துடையனாய்ப் பார்த்தும் அறிந்தும்,

எப்பொருட்கும் சமநிலத்தே நிலை நிற்பான் - பொருள்களனைத்தினிடத்தும் சமமான சிவபரம் பொருளிடனித்திலே நிலைத்திருப்பன் எ - று.

(பொ - ரை.) சுகத்தினிடத்தும் துக்கத்தினிடத்தும், கலந்து உரையாடும் நண்பரிடத்தும், பகைவரிடத்தும், பெருமையுடையாரிடத்தும், பெருமை யில்லாதாரிடத்தும் குற்றமில்லாத ஒளி மேம்பட்டிருக்கும் இரத்தினங்களினிடத்தும், பொன்னினிடத்தும், கல்லினிடத்தும், ஓட்டினிடத்தும், விருப்ப மின்மையால் ஆசையை முற்றும் ஒழித்து ஒத்த கருத்துடையனாய்ப் பார்த்தும் அறிந்தும், பொருள்களனைத்தி னிடத்தும் சமமான சிவபரம்பொருளிடத்திலே நிலைத்திருப்பன் எ - று.

(க - ரை.) ஞானசாதகன், விரும்பப்படும் பொருள்களினிடத்தும் வெறுக்கப்படும் பொருள்களினிடத்தும் விருப்பு வெறுப்பின்றி, எப்பொருளினிடத்தும் சமமான சிவபரம் பொருளினிடத்து நிலைத்திருப்பன் என்பதாம்.

நேசமற ஆசையினை யறவிட்டு எனவும், ஒத்துப் பார்த்து எனவும், எப்பொருட்கும் சம நிலத்தே எனவும் கூட்டுக.

கு - வேற்றுமை மயக்கம்.

இனினும் என்பது எவ்விடத்தும் சென்று பொருந்தும்.

இக்கருத்தினை * "தக்க பிரியாப் பிரியமின்றி யோட்டிற் றபநியத்திற் சமபுத்தி பண்ணிச் சங்கரனோ டொக்க வுறைந்து" எனவும், ¶ "கேடு மாக்கமுங்கெட்ட திருவினார் - ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவர் - கூடுமன்பினிற் கும்பிடலேயன்றி - வீடும் வேண்டாவிறலின் விளங்கினார்" எனவும் சிவாநுபூதிச் செல்வர்கள் திருவாய் மலர்ந்தருளுவாராயினர்.

சமநிலம் - சிவபரம் பொருள் † "வேண்டுதல் வேண்டாமையிலான்" என்னும் பொய்யா மொழியை நோக்குக.

சமநிலத்தே என்ற விடத்து ஏகாரம், பிறிதொன்றைப் பற்ற மாட்டானென்னும் பொருள் குறித்தலிற் பிரி நிலை. (ருகூ)

(அ - கை.) ஞானசாதகன், உலகப் பொருள்களிடத்து அச்சமும் அதிசயமும் அடையான் எனக் கூறுகின்றார்.

60. யோகி யாகி யொழுகு மியல்பினோன்
போக மாற்றிப் பொருண்மேற் புலன்களை

* சிவஞான சித்தியார் அ-ம் ரு-ம் செ. உகூ.

¶ பெரிய புராணம் திருக்கூட்டச் சிறப்பு செ. அ.

† திருக்குறள் கடவுள் வாழ்த்து செ. ச.

வேக மாய பயமும் விருப்பும்போய்
மாகர் காணுச் சுகத்தை மருவுவான்.

(இ - ள்.) யோகியாகி ஒழுகும் இயல்பினோன் - சிவயோகியாய்ச் சஞ்சரிக்கும் இயல்பினை உடைய ஞானசாதகன், பொருள்மேல் புலன்களை போகமாற்றி - உலகப் பொருள்களினிடத்து இந்திரியங்களைச் செல்லவொட்டாது தடுத்து, வேகம் ஆய பயமும் வியப்பும் போய் - உற்பாதத்தாலுண்டாகும் அச்சமும் அதிசயமுமின்றி, மாகர் காண சுகத்தை மருவுவான் - தேவர்களுங் காணமுடியாத பேரின்பத்தை அடைவன் எ - று.

(பொ - ரை.) சிவயோகியாய்ச் சஞ்சரிக்கும் இயல்பினையுடைய ஞானசாதகன், உலகப்பொருள்களினிடத்து இந்திரியங்களைச்செல்லவொட்டாது தடுத்து, உற்பாதத்தாலுண்டாகும் அச்சமும் அதிசயமுமின்றி, தேவர்களுங் காணமுடியாத பேரின்பத்தை அடைவன் எ - று.

(க - ரை.) ஞானசாதகன், இந்திரியங்களை அடக்கி, உற்பாதத்தால் அச்சமும் அதிசயமுமின்றிப் பேரின்பத்தை அநுபவித்துக்கொண்டிருப்பன் என்பதாம்.

புலன்கள் - அறியும் இந்திரியங்களைக் குறித்தன.

போக என்பது இந்திரியத்தின் அடக்கத்தையும், மாற்றி என்பது மனத்தின் அடக்கத்தையும் குறித்தவாறும். மனத்தின்கண் ஆசையறுதலாலுண்டாகும் இந்திரிய அடக்கமே அடக்கமெனச் சிறப்பித்துக் கூறப்படும். ¶ பொருந்தணைமேல் வரும்பயனை போக மாற்றி என்றதும் இக்கருத்துப் பற்றியேயாம்.

வேகம் - பின்விளையுங் கேட்டிற்கு முன்னறிவிப்பின்றி விரைவில் தோன்றும் உற்பாதத்தைக் குறித்தது. பூகம்பம் முதலியன அச்சந்தருவன. சந்திர சூரியர்கள் நக்ஷத்திரங்களின் தோற்றத்தில் மாறுதல் அதிசயத்தைத் தருவன. † எங்கெழிலென் ஞாயிறெமக்கேலோ ரெம்பாவாய். என்றதும் இக்கருத்துப் பற்றியது. (சு௦)

(அ - கை.) சகல வுயிர்களையுந் தன்னைப் போலக் கருதி, புகழ்ச்சி இகழ்ச்சிகளில் சமபுத்தி உடையவன், இதுகாறுங் கூறிய ஞானசாரத்தை உடையன் என முடித்துக்காட்டுகின்றார்.

61. தனக்கினிய வும்வகையே சராசரங்க ளனைத்தினையும்
நினைத்திகழ்வார் புகழ்வார்பா லொத்திருக்கு நீர்மையினை

---

¶ அப்பர் தேவாரம். சிதம்பரம்.

† திருவாசகம். திருவெம்பாவை.

மனத்துடைய னவவன் யாம்முரைத்த வாசாரம்
அனைத்துடைய னாகவறி வெறியமரு மைம்பாலாய்.

(இ - ள்.) வெறி அமரும் ஐம்பாலாய் - வாசனை தங்கிய ஐந்துவகை யாக முடிக்கப்படுங்கூந்தலை உடையவளே! தனக்குஇனியன் ஆம்வகையே - தனக்கு இன்பத்தை விரும்புபவனாக இருத்தல் போலவே, சர அசரங்கள் அனைத்தினையும் நினைத்து - சஞ்சரிக்கும் உயிர்கள் சஞ்சரிக்காது நிற்கும் தாவர வுயிர்கள் அனைத்தினையும் இன்பத்தை விரும்புவனவாக நினைத்து, இகழ்வார் புகழ்வார்பால் ஒத்து இருக்கும் நீர்மையினை மனத்து உடையன் ஆன அவன் - இகழ்பவரிடத்தும் புகழ்பவரிடத்தும் வெறுப்பும் விருப்பு மின்றியிருக்குந் தன்மையினை மனத்தின்கண் உடையவன் எவனோ அத் தகைய அவன், யாம் உரைத்த ஆசாரம் அனைத்து உடையனாக அறி - யாம் இதுகாறுங் கூறிய ஞானசாரம் அனைத்தும் உடையவனாக அறிந்து கொள் வாய் எ - று.

(பொ - ரை.) வாசனை தங்கிய ஐந்து வகையாக முடிக்கப்படுங் கூந் தலைஉடையவளே! தனக்குஇன்பத்தை விரும்புபவனாக இருத்தல்போலவே, சஞ்சரிக்கும் உயிர்கள் சஞ்சரிக்காது நிற்குந் தாவர வுயிர்கள் அனைத்தினை யும் இன்பத்தை விரும்புவனவாக நினைத்து, இகழ்பவரிடத்தும் புகழ்பவ ரிடத்தும் வெறுப்பும் விருப்புமின்றி யிருக்குந்தன்மையினை மனத்தின்கண் உடையவன் எவனோ, அத்தகைய அவன், யாம் இதுகாறுங் கூறிய ஞான சாரம் அனைத்தும் உடையவனாக அறிந்துகொள்வாய் எ - று.

(க- ரை.) எல்லாவுயிர்களிடத்தும் கருணையும் புகழ்பவர் இகழ்பவ ரிடத்துச் சமபுத்தியும் உடையவன் ஞானசாரம் அனைத்தும் உடையவன் என்பதாம்.

இதுகாறுங் கூறப்பட்ட ஞானசாரம் அனைத்தும் இவ்விரண்டனுள் அடங்கு மென்பது கருத்து.

ஐம்பால் - ஐந்துவகையாக முடிக்கப்படுங் கூந்தல். அவையாவன:— குழல், கொண்டை, சுருள், பனிச்சை, முடி என்பன. அவற்றுள்,

குழல் - சுருட்டி முடித்தல்.

கொண்டை - ஒரு பக்கமாகச் செருகி முடித்தல்.

சுருள் - நேராகப் பின் பக்கத்தில் செருகி முடித்தல்.

பனிச்சை - பின்னிமுடித்தல். இது, சடையென வழங்கும்.

முடி - உச்சியின் முடித்தல். இது, ஸ்நான காலத்தும் ஸ்நான முடிந்த சமயத்தும் உபயோகிக்கப்படும். (கக)

(அ - கை) ஞானசாதகன், தர்க்கம் முதலிய வியாபாரங்களைச் செய்யான் எனக் கூறுகின்றார்.

62. வாதுரைபயனில் சொல்லும் பிறருடன் மகிழ்ந்திருத்தல்
பேதுறு பிணக்கநீங்கிப் பெரியவ னருளினாலே
ஓதுநூ லோதலோவி யுலகினினன்று தீதென்
றாதியி லுரைத்த வெல்லா மறவிட்டே யமர்ந்திருப்பான்.

(இ - ள்.) அருளினாலே பெரியவன் - சிவோகம்பாவனை செய்து சிவனருளைப் பெற்றமையால் மேம்பட்டு விளங்கும் பெருமையினை உடையவன், உலகினில் - உலகத்தில், வாது உரை - தர்க்கம் செய்தலும், பயன் இல் சொல் உம் - பயனில்லாத சொற்களைச் சொல்லுதலும், பிறர் உடன் மகிழ்ந்து இருத்தல் - பிறருடன் சிநேகமாயிருத்தலும், பேதுறு பிணக்கம் நீங்கி - மாறுபட்டுப் பகைத்தலும் இன்றி, ஓது நூல் ஓதல் ஓவி - விதி விலக்குகளைக் கூறும் நூல் ஓதுதலையும் விட்டு, ஆதியில் நன்று தீதென்று உரைத்த எல்லாம் அறவிட்டு - இடைப்பட்டதின்றிப் பிரவாக அநாதியாயுள்ள நன்மை தீமை யென்று சொல்லப்பட்ட கன்மம் அனைத்தையும் ஒரு சேர விட்டு, அமர்ந்து இருப்பான் - அடங்கியிருப்பன் எ - று.

(பொ - ரை.) சிவோகம்பாவனை செய்து சிவனருளைப் பெற்றமையால் மேம்பட்டு விளங்கும் பெருமையினை உடையவன், உலகத்தில் தர்க்கம் செய்தலும், பயனில்லாத சொற்களைச்சொல்லுதலும், பிறருடன் சிநேகமாயிருத்தலும், மாறுபட்டுப் பகைத்தலும் இன்றி, விதி விலக்குகளைக் கூறும் நூலோதுதலையும் விட்டு, இடைப்பட்டதின்றிப் பிரவாக அநாதியாயுள்ள நன்மை தீமை யென்று சொல்லப்பட்ட கன்மம் அனைத்தையும் ஒரு சேர விட்டு அடங்கியிருப்பன் எ - று.

(கு - ரை.) சிவனருளைப் பெற்றவன், உலக சம்பந்தமான செயல்களொன்றுமின்றி அடங்கியிருப்பன் என்பதாம்.

நூலோதல் சிறந்தமையாதலின், வாதுரைமுதலியவற்றை நீங்கியென வேறு பிரித்தார். ¶ "ஞானநூல்தனை யோதல் ஓதுவித்தல் நற்பொருளைக் கேட்பித்தல் தான் கேட்டல் நன்றா ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும் இறைவனடி யடைவிக்கும் எழில்ஞான பூசை" யாதலின், இங்கே ஓது நூல் என்றது விதிவிலக்குகளைக் கூறும் நூலையெனக் கொள்க.

ஆதி - இடைப்பட்டது. ஆதியில்லாதது அநாதி. நன்மை தீமை அனைத்தும் முற்பிற்பாடு தெரியப்படாமை பற்றிப் பிரவாக அநாதி யெனப்படும். இவற்றிற்குக் காரணமான மூலகன்மம் அநாதி யெனப்படும். நன்மை தீமை என்பன சஞ்சித கன்மம். செயல் ஆகாமிய கன்மம். இன்பத் துன்ப

¶ சிவஞான சித்தியார். அ-ம். சூ-ம் செ. உரு.

அநுபவம் பிராரத்த கன்மம் 0 "தன்மமோ டதன்மமாகித் தானிருபயனுந் தந்து - நன்மை தீமையினு மின்பத் துன்பினுநாடிக் காண - முன்னமே யான்மாவின்றன் மும்மலத் தொன்றதாகிக் - கன்மமுமூலங் காட்டிக் காமிய மலமாய் நிற்கும்". என்னுந் திருவிருத்தம் இக்கருத்தினை நன்கு விளக்கும்.

அமர்தல் - அடங்குதல். (சுஉ)

(அ - கை.) ஞானசாதகன் நீக்கத்தக்ககுற்றங்களைத் தொகுத்துக் கூறு கின்றார்.

63. ஆசை கோபம் பயஞ்சோக ராகமாம்
மாசு மாட்சியுள் ளோராக்க மாற்றாமை
பேசு தீமை பிறர்க்குத் தமக்கிலாத்
தேசி முக்குடன் றீர்வார் சிறந்தவர்.

(இ - ள்.) ஆசை - கிடையாத பொருளினிடத்து ஆசையும், கோபம் - ஆசை தடைப்பட்ட விடத்து நிகழுங்கோபமும், பயம் - ஆசைப்படும் பொருளுடையார் அறியின் என் செய்வரோ என்னும் அச்சமும், சோகம் - அச்சங்காரணமாக நிகழும் துக்கமும், மாட்சியுள்ளோர் ஆக்கம் ஆற்றாமை - பெருமையுடையாரது செல்வங்கண்டு பொறாமை அடைதலும், பிறர்க்கு தீமை பேசு(தல்) - பிறருக்குக் கேடு உண்டாகும்படி பேசுதலும், தமக்கு இலாதேசு ராகம் ஆம் மாசு - தமக்குப் பொருந்தாத கீர்த்தியை விரும்புத லாகிய சிறுமையும், இழுக்கு - (ஆகிய இவை உடைமை) ஞான ஒழுக்கத் திற் றவறுதலாகும், உடன் தீர்வார் சிறந்தவர் - (இவை வாசனை பற்றித் தோன்றுமாயின்) தோன்றினவுடனே நீக்குபவர் ஞானவொழுக்கத்திற் சிறந்தவராவர் எ - று.

(போ - ரை.) கிடையாத பொருளினிடத்து ஆசையும், ஆசைதடைப் பட்ட விடத்து நிகழுங்கோபமும், ஆசைப்படும் பொருளுடையார் அறியின் என் செய்வரோ என்னும் அச்சமும், அச்சங்காரணமாக நிகழும் துக்கமும் பெருமை யுடையாரது செல்வங்கண்டு பொறாமை அடைதலும், பிறருக்குக் கேடு உண்டாகும்படி பேசுதலும், தமக்குப் பொருந்தாத கீர்த்தியை விரும் புதலாகிய சிறுமையும் ஆகிய இவை உடைமை ஞான ஒழுக்கத்திற் றவறுத லாகும். இவை, வாசனை பற்றித் தோன்றுமாயின், தோன்றினவுடனே நீக்குபவர் ஞான ஒழுக்கத்திற் சிறந்தவராவர் எ - று.

---

0 சிவஞான சித்தியார். உ-ம் சூ-ம். செ. ளுகூ.

(க - ரை.) ஆசை முதலிய குற்றங்கள் தோன்றாதவாறு தடுப்பவரே ஞான ஒழுக்கத்திற் சிறந்தவர் என்பதாம்.

தமக்கில்லாத் தேசு ராகமாம் மாசு எனக் கூட்டிப் பொருள் கொள்க. (சுங)

(அ - கை.) ஞானசாதகருக்கு ஞானம் விளங்கித் தோன்றினும் வினை காரணமாகப் போகத்தில் இச்சை யுண்டாகு மெனக் கூறுகின்றார்.

64. பொருண்முழுதும் விட்டுடம்பு பொருந்துஞ்சார் வறப்போவார்
இருளறுஞா னம்விளங்கி யெப்பொருளு மறிவாராய்
இருவினைவீ டறிவாலே யிடர்பிறவென் றறிந்தாலும்
மருளதுறும் போகத்து மனம்வைப்பர் சாதகர்தாம்.

(இ - ள்.) சாதகர் - ஞானசாதகர், உடம்பு பொருந்தும் பொருள் முழுதும் விட்டு - சரீர சம்பந்தமான பொருள்கள் அனைத்தையும் நீக்கி, சார்வுஅற போவார் - பற்று முற்றும்நீங்கினவராவர், இருள் அறும் ஞானம் விளங்கி எப்பொருளும் அறிவார் - மல மற்ற சிவஞானம் விளங்கிப் பொருள்களனைத்தையும் (அதுவதுவாய் நின்று ஒரு சேர) அறிபவராவர், பிற இடர் என்று அறிந்தாலும் - இவர் சிவஞானமல்லாத பாசஞான பசு ஞானங்கள் துன்பந் தருவன என்று அறிந்திருப்பினும், ஆய் இருவினை வீடு அறிவாலே - ஆராய்ந்தறியப்படும் இருவினைசெலுத்தும்அந்த ஞானங்களால், மருள் அது உறும் போகத்து மனம் வைப்பர் - அறியாமையை உண்டு பண்ணும் போகத்தினிடத்துப் பற்று வைப்பர் எ - று.

(பொ - ரை.) ஞானசாதகர், சரீர சம்பந்தமான பொருள்களனைத்தையும் நீக்கிப் பற்று முற்றும் நீங்கினவராவர்; மலமற்ற சிவஞானம் விளங்கிப் பொருள்களனைத்தையும் அதுவதுவாய் நின்று ஒரு சேர அறிபவராவர். இவர், சிவஞானமல்லாத பாச ஞான பசு ஞானங்கள் துன்பந் தருவன என்று அறிந்திருப்பினும், இருவினை செலுத்தும் அந்த ஞானங்களால், அறியாமையை உண்டு பண்ணும் போகத்தினிடத்துப் பற்றுவைப்பர் எ - று.

(க - ரை.) சிவஞானம் விளங்கப்பெற்ற ஞானசாதகன், வினையால் செலுத்தப்பட்டுப் போகத்தில் பற்று வைப்பன் என்பதாம்.

சார்வு - பற்று.

போதல் - நீங்குதல்.

இருள் - மலம். இருளறும்ஞானம் - சிவஞானம்.

ஆய்இருவினை - ஆராய்ந்தறியப்படும் இருவினை. தனக்கு விருப்பமில்லாத பாசஞான பசு ஞானங்கள் தன்னிடத்துத் தோன்றுமாயின், அத்

தோற்றத்திற்குக் காரணம் வினையேயாம். அவ்வினை உண்டென்பது காட்சி யளவையால் பெறப்படாதாயினும், செலுத்தப்படுங் காரியம் பற்றிக் கருதலளவையால் பெறப்படுமாதலின், ஆய் இருவினை யென்ருர்.

வீடு - விடு என்பதன் விகாரம். செலுத்துதலென்னும் பொருள் குறித்தது.

இடர் தருவனவற்றை இடர் என்ருர்.

மருளது என்ற விடத்து அது, பகுதிப் பொருள் விகுதி.

மனம் - மனத்தில் நிகழும் பற்றைக் குறித்தது.

ஈற்றிலுள்ளதாம் - அசை.

பொருள்கள் அனைத்தும்உயிராலும்சிவனுலும் அறியப்படும். உயிரால் அறியப்படுங்காலத்துஉயிர்உடம்பாய்நிற்கப்பாசஞானபசுஞானங்களால் தன் பொருட்டு ஒவ்வொன்ருகச் சுட்டி அறியப்படும். இவ்வாறு அறியப்படுங் காலத்துஅவ்வறிவு பொருள்களின் வேருய் நின்று ஒவ்வொன்றினுங் கட்டுப் பட்டுத்துன்பத்துக்கேதுவாம். ஆதலின், அப்பாச ஞானபசுஞானங்கள்நீங்க வேண்டு மென்னுங் கருத்துப் பற்றிப் பொருள் முழுதும் விட்டு என்ருர்.

சிவனல் அறியப்படுங்காலத்துச் சிவஞானத்தால் தன்பொருட்டன்றி உயிர்களின் பொருட்டுக் கன்மத்துக்குத் தக்கவாறு அவ்வுயிர்களுக்குக் கூட்டுவித்தல் காரணமாக அறியப்படும். இவ்வாறு அறியப்படுங்காலத்து அவ்வறிவு, பொருள்களோடு கலந்து அதுவதுவாய் நின்று அறியும். ஆதலின், இந்தச் சிவஞானத்தைப் பெறவேண்டு மென்னுங் கருத்துப் பற்றி, இருளறும் ஞானம் விளங்கி எப்பொருளு மறிவார் என்ருர். (கூச)

(அ - கை.) சிவஞானம் உடையவருக்குச் சித்தியனைத்தும்வருமெனக் கூறுகின்ருர்.

65. விட்டு மேலாம் பதத்தினை மேவுவோர்க்
கட்ட மாசித்தி வந்துறும் வாராதேல்
கட்ட மான கதியைக் கடந்தவர்
எட்டி டாமுத்தி தன்னையே யெய்வரால்.

(இ - ள்.) விட்டு - பற்றுக்கள் அனைத்தையும் விட்டு, மேலாம் பதத்தினை மேவுவோர்க்கு - சிவனேடு பிரிப்பின்றி நிற்கும் மேலான நிலையை விரும்பும் ஞானசாதகருக்கு, அட்டமாசித்தி வந்துறும் - எட்டுப் பெரிய சித்திகளும் தாமேவந்துபொருந்தும், வாராதேல் - அச்சித்திகள் வரவில்லையாயின், கட்டமானகதியைகடந்து - (அவற்றின்பயனுயுள்ள) பிறந்துஇறந்து உழலுந் துன்பமான பிரமபத முதலியவற்றை அடையாது, அவர் - அந்த ஞான சாதகர், எட்டிடா முத்தி தன்னை யெய்வர் - பாசஞான பசுஞானங்களால் அடையப்படாத பரமுத்தியினையே அடைவர் எ - று

(பொ - ரை.) பற்றுக்கள் அனைத்தையும் விட்டுச் சிவனோடு பிரிப் பின்றி நிற்கும் மேலான நிலையை விரும்பும் ஞான சாதகருக்கு, எட்டுப் பெரிய சித்திகளும் தாமே வந்து பொருந்தும். அச்சித்திகள் வரவில்லை யாயின், அவற்றின் பயனுயுள்ள பிறந்து இறந்து உழலுந் துன்பமான பிரமபத முதலியவற்றை அடையாது, அந்த ஞானசாதகர், பாசஞான பசு ஞானங்களால் அடையப்படாத பரமுத்தியினையே அடைவர் எ - று.

(க - ரை.) ஞானசாதகருக்கு அணிமா முதலிய சித்திகளனைத்தும் தாமே வரும். வரவில்லையாயின், அவற்றின் பயனாகிய பதமுத்திகளை அடையாது பரமுத்தியினையே அவர் அடைவர் என்பதாம்.

விட்டு என்பதற்கு பற்றுக்கள் என்னும் செயப்படு பொருள் வருவித்து உரைக்க.

மேலாம் பதம் - சிவசாயுச்சியம்.

அட்டசித்தி யென்னது அட்டமா சித்தி யென்றமையால், அது இரு வகைப்படு மென்று அறிவித்தவாறாயிற்று. மாரணம், வசியம் முதலியன அட்டசித்தி யெனப்படும். இவை அட்ட கர்மம் எனவும் வழங்கப்படும். அணிமா முதலியன அட்டமாசித்தி யெனப்படும். இவை, ஞானசாதகருக் குத் தாமேவரும் என்பது * "எம்மை யுணர்ந்த யோகியர்களிவற்றை விரும்பா ரெனினுமவர் - தம்மை நிழல்போலடைந் துலகர்க்கனையார் பெருமை தனை யுணர்த்தும்" என்பதனாலும், பிரமபத முதலியவற்றையே தருமென்பது ‡ "அட்டகுண மெட்டுச் சித்தி கோகநதன் முதல் வாழ்வு குலவுபத மெல்லாம் வெறுத்து" என்பதனாலும் அறியப்படும். சித்தியாரில் அட்டகுணம் என்பது அட்ட கர்மத்தைக் குறித்தது.

முத்தி தன்னையே என்ற விடத்து தன் - அசை. ஏகாரம் பத முத்தி யடையா ரெனப் பிரித்தமையின் பிரிநிலை.

ஈற்றிலுள்ள ஆல் அசை. (சுரு)

(அ - கை.) உடம்பும் உலகும் சிவமெனக் காண்பவனேஎன்னைக் கண் டவனாவன் எனக் கூறுகின்றார்.

66. ஐவகைய பூதகா ரியமென்னு மவ்வுடம்பில்
மெய்வகையாஞ் சிவனிற்குஞ் சிவமுதலா மேதினியீ
றிவ்வகைய வுலகங்க ளனைத்தினையு மிறையுருவென்
றுய்வகையா வுணர்ந்தானே யெமையுணர்ந்தா னுமைகேணீ.

---

* பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல். அட்டமாசித்தி யுபதேசித்த படலம். செ. உஅ.

‡ சிவஞானசித்தியார் சு-ம் சூ-ம். செ. ரு.

(இ - ள்.) உமை நீ கேள் - பார்வதியே நீ கேட்பாயாக, ஐவகைய பூத காரியம் என்னும் அவ்வுடம்பில் - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் ஐந்துவகையான பூதங்களின் காரியம் எனப்படும் அந்தத்தூல வுடம்பில், மெய்வகையாம் சிவன் நிற்கும் - உண்மைப் பொருளின் இனமாகிய சிவன் நிலை பெற்று விளங்குவன். (ஆகையால்) சிவம்முதல் மேதினி ஈறுஆம் இவ்வகைய உலகங்கள் அனைத்தினையும் - சிவதத்துவம் முதல் பிருதிவிதத்துவம் முடிவாக ஒவ்வொரு தத்துவத்திலுமுள்ள இவ்வாறு பல வேறு வகைப்படும் உலகங்கள் அனைத்தையும், இறை உரு என்று - சிவனுடைய திருமேனியென்று, உணர்ந்தானே உய்வகையா எமைஉணர்ந்தான் - அறிந்தவனே பிறப்பு இறப்புக்களில் நின்று விலகும் முறையாக எம்மை அறிந்தவனாவன் எ - று.

(பொ - ரை.) பார்வதியே நீ கேட்பாயாக. பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் ஐந்துவகையான பூதங்களின் காரியமெனப்படும் அந்தத் தூல வுடம்பில் உண்மைப் பொருளின் இனமாகிய சிவன் நிலைபெற்று விளங்குவன். ஆகையால், சிவ தத்துவம் முதல் பிருதிவிதத்துவம் முடிவாக ஒவ்வொரு தத்துவத்திலுமுள்ள இவ்வாறு பல வேறு வகைப்படும் உலகங்கள் அனைத்தையும் சிவனுடைய திருமேனி யென்று அறிந்தவனே, பிறப்பு இறப்புக்களில் நின்று விலகும் முறையாக எம்மை அறிந்தவனாவன் எ - று.

(க - ரை.) உலகங்கள் அனைத்தும் சிவனுக்குத் திருமேனி யெனக் காண்பவன், சிவனை யறிந்தவனாய்ப் பிறப்பு இறப்புக்களில் நின்று நீங்கினவனாவன் என்பதாம்.

அகரம், பஞ்ச பூதங்களின் காரியமான தூலவுடம்பைச் சுட்டிற்று.

மெய்வகை யாம் என்ற விடத்து வகை - இனம்.

உடம்பில் இருக்கும் நித்தப் பொருளாகிய உயிருக்கு இனமாய் விளங்குவது சிவமாதலின், உடம்பில் மெய்வகையாம் சிவன் நிற்கும் என்றார். உடம்பு அழியுந் தன்மை யுடையது. ஆகையால், உயிரோடு கூடி என்றும் நிற்பதாக ஒருடம்பும் இல்லை யென்பது பெறப்படும். இக்கருத்துப்பற்றியே † "புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட், டுச்சி லிருந்த வுயிர்க்கு" என்றனர் தேவர். உயிர் அவ்வாறழிவதின்றி நித்தமாயிருக்கும். இக் கருத்துப் பற்றியே * மன்னுயிர் என்றனர். அன்றியும் உடல் சடப்பொருள். உயிர் சித்துப்பொருள். ஆகவே, அழிதற் றன்மை பற்றியும் சடத்தன்மை

† திருக்குறள். நிலையாமை. செ. க0.

* ஷை அருளுடைமை. செ. ௬.

பற்றியும் பிரிதல் பற்றியும் உடம்பு, உயிருக்கு இனமாகாதென்பதும், நித்தத் தன்மைபற்றியும் சித்துத் தன்மைப்பற்றியும் பிரிப்பின்றி நிற்றல் பற்றியும் சிவம், உயிருக்கு இனமாகு மென்பதும் பெறப்படுமாறு காண்க. சிவம் உயிரோடு பிரிப்பின்றி நிற்கு மென்பது பற்றியே, ¶ சார்புணர்ந்து என்றனர் தேவர்.

சிவம் - சிவதத்துவம்.

மேதினி - பிருதிவிதத்துவம்.

சிவ முதலிய தத்துவங்களிலிருக்கும் உலகங்கள் என்று கூறவேண்டுவதை, சிவம் முதல் மேதினியீறும் உலகங்க ளென்றார். இகரம் தத்துவங்களின் பன்மையைச் சுட்டிற்று. சுட்டவே, இவ்வகைய உலகங்கள் என்பதற்கு, தத்துவங்கள் பலவாயினாற்போல, இத்தத்துவங்களிலிருக்கும் பலவேறு வகைப்பட்ட உலகங்களென்பது பொருளாகக் கொள்க.

தூல வுடம்பில் சிவதத்துவமுதல் பிருதிவி தத்துவம் முடிவான முப்பத்தாறு தத்துவங்களும், சூக்கும சரீரமாயும் அதனைச் செலுத்துவதாயும் உள்ளனவாதலின், தூலவுடம்பில் சிவன் நிற்பன் என்பது, தத்துவங்களிலுள்ள உலகங்களனைத்தும் சிவனுடைய திருமேனி யென்று அறிதற்கு ஏதுவாயிற்று.

ஏது கண்கூடாகவன்றோ இருத்தல்வேண்டும்; தூலவுடம்பில் சிவன் நிற்பன் என்பது கண்கூடாக அறியப்படவில்லையே எனின், கூறுதும். கண்கூடென்பது நிச்சயமாகக் காண்பது. தூலவுடம்பு சடமாயிருந்தும் போக்கு வரவு புரிதல் பற்றியும் பிணமாதல் பற்றியும் அவ்வுடம்பினுள் அதனின் வேறாய உயிருண்டென்பது துணியப்படும். அவ்வுயிர், தான் எண்ணியவாறாகாமை பற்றி, தன்னை நடத்தும் சிவம் தன்னுள்ளிருந்து நடத்த நடக்கு மென்பது பெறப்படும். படவே, உயிரை நடத்தும் சிவனுக்குத் தூலவுடல் திருமேனி யென்பது ஏதுவாகி உலகம் அனைத்தும் சிவனுக்குத் திருமேனி யென்பதைச் சாதித்துத் தருமாறு காண்க. இது, ஒருவன் ஒருத்தி ஒன்று என்பது அவயவப்பகுப் புடைமையால் தோன்றி நின்றழியும்; தோன்றி நின்றழிதலால் கருத்தாவுண்டென்று சாதித்தது போலாம். உலகும் உடலும் சிவனுக்குத் திருமேனி யென்றது, அவற்றுடன் கலந்து நிற்றல் பற்றியே யன்றிப் பிறிதில்லை. இக்கருத்தினை † "அத்துவா மூர்த்தியாக அறைகுவதென்னை யென்னின்" என்றற்றொ

¶ திருக்குறள் மெய்யுணர்தல். செ. ௯.

† சிவஞான சித்தியார். ௧-ம் சூ-ம். செ. ௫௯.

டக்கத்துத் திருவிருத்தத்தாற் றெளிக. உண்மையில் சிவனுக்குத்திருமேனி ஞானமேயாம். இதுபற்றியே 0 சுத்தமெய்ஞ்ஞான மேனி என்றார்.

உய்தல் - விலகுதல். (௬௬)

(அ - கை.) இவ்வாறு கூறப்பட்ட ஞானசாதகனாகிய ஞானியைப் பூசை செய்தவன் தான் விரும்பிய முத்தியை அடைவனெனக்கூறுகின்றார்.

67. இவ்வகைய ஞானிதனக் கிருநிலத்தோர் கந்தபுட்பம்
மெய்வகைய பலந்தூபம் புனலாடை விளக்கமுது
செய்வகைய மனவாக்குக் காயத்தாற் பூசைசெய்தால்
அவ்வகைய உடம்புடனே வேண்டுமுத்தி யடைவரால்.

(இ - ள்.) இவ்வகைய ஞானி தனக்கு - இவ்வாறு ஞானவொழுக்க முடைய ஞானிக்கு, இருநிலத்தோர் - பெரிய மண்ணுலகின்கண் உள்ளவர்கள், புனல் ஆடை விளக்கு கந்த புட்பம் பலம் அமுது - நீரால் அபிடேகம் செய்து ஆடை தரித்து சந்நிதியில் திருவிளக்கிட்டு வாசனையோடு கூடிய மலர் மாலை சாத்தி பழவகைகளும் அன்னமும் படைத்து, தூபம் - தூபம் சமர்ப்பித்து, மெய்வகைய மனம் வாக்கு காயத்தால் - உண்மையின்பாற் பட்ட மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும், செய்வகையபூசைசெய்தால் - செய்யும்வகையினவாகிய சிவபாவனை தோத்திரம் நமஸ்காரங்களால் பூசை செய்யின், அவ்வகைய உடம்பு உடனே வேண்டும் முத்தி அடைவர் - அவ்வாறு செய்த சரீரத்துடனே தாம் விரும்பிய முத்தியைப் பெறுவர் எ - று.

(பொ - ரை.) இவ்வாறு ஞானவொழுக்கமுடைய ஞானிக்கு, பெரிய மண்ணுலகின்கண் உள்ளவர்கள், நீரால் அபிடேகஞ்செய்து, ஆடைதரித்து, சந்நிதியில் திருவிளக்கிட்டு, வாசனையோடு கூடிய மலர் மாலை சாத்தி, பழவகைகளும் அன்னமும் படைத்து, தூபம் சமர்ப்பித்து, உண்மையின்பாற் பட்ட மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் செய்யும் வகையினவாகிய சிவ பாவனை தோத்திரம் நமஸ்காரங்களால் பூசை செய்யின், அவ்வாறு செய்த சரீரத்துடனே தாம் விரும்பிய முத்தியைப் பெறுவர் எ - று.

(க - ரை.) ஞானியைப்பூசித்தவர், மறுபிறப்பின்றி, பூசித்தஅப்பிறவி யிலேயே முத்தியைப் பெறுவர் என்பதாம்.

செய்வகைய செய்தால் என்பது கந்தபுட்பம் முதலியவற்றோடுஞ் சென்று பொருந்தும்.

மெய்வகைய மனவாக்குக் காய மென்று கூட்டுக.

அவ்வுடம்புடனே என்பது மறுபிறப்பின்மையைக் குறித்தது.

ஞானி, சிவமாய் நிற்றலின், சிவனைப்போல் ஞானியைப் பூசிக்க

---

0 சிவஞானசித்தியார் எ-ம் சூ-ம். செ. ௩.

வேண்டு மென்பதும், பூசித்தால் சிவனுலடையும்பேறு அடைதல் கூடுமென்பதும் இதனல் பெறப்பட்டன.

சிவமாய் நிற்பன் என்னும் உண்மையை, * "சாக்கிரத்தேயதீதத்தைப் புரிந்தவர்களுலகிற்சருவசங்க நிவிர்த்தி வந்ததபோதனர்களிவர்கள் - பாக்கியத்தைப்பகர்வது வென்னிம்மையிலேயுயிரின் பற்றறுத்துப் பரத்தையடையாவு சிவான்றே" என்னுந் திருவாக்கானு முணர்க.

முத்தியைக் கூறவே, விரும்பப்படும் ஏனையவும் பெறுவர் என்றவாறாயிற்று.

ஈற்றிலுள்ள ஆல் - அசை. (சுஎ)

(அ - கை) ஞானியைப் பூசித்தவர் சிவபுண்ணியத்தையும் தூசித்தவர் கொடிய பாவத்தையும் அடைவரெனக் கூறுகின்றூர்.

68. சொன்ன ஞானி தனைத்துதி செய்தவர்
முன்னஞ் செய்யற முற்று மடைகுவர்
இன்னல் சொன்னவ ரெய்துவர் வன்பவம்
அன்ன மீபவர் அசைவின்ஞானஞ்சேர்வார்.

(இ - ள்.) சொன்னஞானிதனை துதிசெய்தவர் - யாவராலும் புகழப்பட்ட சிவஞானியைப் புகழ்ந்து தோத்திரம் செய்தவர், முன்னம் செய் அறம் முற்றும் அடைகுவர் - அவ்வாறு செய்தற்கு முன்னர் அந்த ஞானியால் செய்யப்பட்ட புண்ணியம் அனைத்தையும் பெறுவர், அன்னம் ஈபவர் அசைவு இல்ஞானம் சேர்வார் - (அந்த ஞானி அருந்த) அமுது செய்விப்பவர் சலனமில்லாத சிவஞானத்தைப் பெறுவர், இன்னல் சொன்னவர் - (அந்த ஞானி வருந்தத்) தீயமொழிகளைச் சொன்னவர், வன்பவம் எய்துவர் கொடிய பாவத்தை அடைவர் எ - று.

(பொ - ரை.) யாவராலும் புகழப்பட்ட சிவஞானியைப் புகழ்ந்து தோத்திரம் செய்தவர், அவ்வாறு செய்தற்கு முன்னர் அந்த ஞானியால் செய்யப்பட்ட புண்ணியம் அனைத்தையும் பெறுவர். அந்த ஞானி அருந்த அமுது செய்விப்பவர் சலனமில்லாத சிவஞானத்தைப் பெறுவர். அந்த ஞானி வருந்தத் தீயமொழிகளைச் சொன்னவர், கொடிய பாவத்தை அடைவர் எ - று.

(கு - ரை.) ஞானியைப்புகழ்ந்தவர் மிகுந்த புண்ணியத்தையும், இகழ்ந்தவர் கொடிய பாவத்தையும் அடைவர் என்பதாம்.

---

* சிவஞான சித்தியார் அ-ம் சூ-ம் செ. கூடு.

மேலைச் செய்யுளில் ஞானியைப் பூசித்தவர், அந்தப் பிறவியிற்றானே முத்தியினை அடைவர் என்றார். எனவே, முத்திக்குச் சிறந்த சாதனம் ஞானம்; ஞானத்திற்குச் சாதனம் சரியை கிரியாயோகங்களாகிய சிவபுண்ணியம் என்னும் விதிபயனற்றதாகுமே யென்னும் ஐயம் நிகழுமாதலால், அதனை நீக்குதற்கு, பூசைவகையிலுள்ள தோத்திரத்தால் சிவபுண்ணியமும், அமுது செய்வித்தலால் ஞானமும் நிகழுமென இச்செய்யுளிற் கூறி ஐயத்தை நீக்கியவாறு அறிக.

ஞானி செய்த புண்ணியம், ஞானியைப் புகழ்ந்தவரைச் சாருமென்பதற்குப் புகழ்ந்தவர் புண்ணியத்தை மிகுதிப்படுத்து மென்பது பொருளாகக் கொள்க. † "சிவஞானச் செயலுடையோர் கையிற்றானம் திலமளவே செய்திடினும் நிலமலை போற்றிகழ்ந்து" என்பதும் இக்கருத்துப்பற்றியது. இன்னல் செய்தவர் வன்பவம் எய்துவர் என்பதனாலும் இக்கருத்து வலியுறுத்தப்படும். இவ்வாறன்றி ஞானிசெய்த புண்ணியம் புகழ்ந்தவரைப் பொருந்து மென்றல் கூடாதென்பதை, ¶ "இவனுலகி லிதமகிதஞ் செய்த வெல்லாம் இதமகித மிவனுக்குச் செய்தார் பாலிசையும்" என்னுந் திருவிருத்தத்திற்கு மாதவச் சிவஞானயோகிகளருளிய உரையாற் றெளிக.

இன்னல் சொன்னவர் என்பதனால், இன்னல் செய்தவரும் எண்ணியவரும் கொள்ளப்படுவர்.

புகழ்தலால் புண்ணியம் உண்டாமென்பது பொருந்தும் அன்னமீதலால் சிவஞானம் உண்டாமென்பது எவ்வாறு பொருந்து மெனின், கூறுதும்:—

§ "மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை - தானந்தவம் உயர்ச்சி தாளாண்மை-தேனின்-கசிவந்தசொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்-பசிவந்திடப் பறந்துபோம்" என்னும் திருவாக்காலும், 0 "அழிபசி" என்னுந் திருவாக்காலும் பசியானது தவத்தை அழிக்குமென்பதும், ‡ "அன்னமதனை யருந்தவரை யருத்தினர்களவர் பலத்திற் - றன்னுவார்களொருபாதியவர்தாமொருபாற்றன்னுவரே" என்னுந் திருவாக்கால் தவமுடையார்க்குப் பசி நீங்கும் பொருட்டு அன்னத்தை உண்பித்தவன் தவமுடையார் தவப்பலத்தின் பாதியைப் பெறுகின்றானென்பதும் பெறப்படும். படவே, ஞானி

---

† சிவஞான சித்தியார் அ-ம் சூ-ம் செ. உசு.

¶ ஷை கO-ம் சூ-ம். செ. க.

§ நல்வழி. செ. உசு.

0 திருக்குறள். சுகை. செ. சு.

‡ சிவதருமோத்தரம். ஏழாவது சுவர்க்க நரக இயல். செ. ரு௬.

யின் பசியை நீக்குதலால், நீக்கினவனுக்கு ஞானம் உண்டாமென்பது பொருந்துமாறு காண்க.

பாசஞான பசுஞானங்கள் நிலைபெறுதலின்றி மாறுவனவாகலின், சிவஞானம் அசைவில் ஞானமெனபட்டது. (சுஅ)

(அ - கை.) உயிர்களுக்குப் பக்குவகாலத்திலுண்டாகும் ஞானத்தையும் ஞானசாரத்தையும் கூறினோம்; கூறவேண்டுவன அனைத்தும் இவற்றி லடங்கு மெனக் கூறி நூலை முடிக்கின்றார்.

சுகூ. முன்னான ஞானமுட னாசார முடிவெல்லாம்
என்னாலே யிக்கால ஞானத்தை யியம்பினதால்
மின்னாரு நுண்ணிடையா யினியுனக்கு மீண்டிதனைச்
சொன்னாலென் சொலத்தகுவ தனைத்தினையுஞ் சொன்னோமே.

(இ - ள்.) மின் ஆரும் நுண் இடையாய் - மின்னலைப் போலும் நுண்ணிய இடையினை உடையவளே! முன் ஆன ஞானம் உடன் ஆசார முடிவு எல்லாம் - முத்திக்கு முதன்மையான ஞானமும் ஞானசாரமும் ஆகிய முடிவுகள் அனைத்தும் அடங்கிய, இக்காலஞானம் என்னால் உனக்கு இயம்பினது - இந்தக் காலோத்தரஞானமானது என்னால் உனக்குச் சொல்லப்பட்டது, சொலத் தகுவது அனைத்தினையும் சொன்னோம் - சொல்ல வேண்டுவன அனைத்தையும் சொன்னோமாகையால், இனி மீண்டு இதனை சொன்னால் என் - இன்னும் திருப்பி இதனைச் சொல்வதனால் பயன் யாது?

(பொ - ரை.) மின்னலைப் போலும் நுண்ணிய இடையினை உடையவளே! முத்திக்கு முதன்மையான ஞானமும் ஞானசாரமுமாகிய முடிவுகள் அனைத்தும் அடங்கிய இந்தக்காலோத்தர ஞானமானது என்னால் உனக்குச் சொல்லப்பட்டது. சொல்லவேண்டுவன அனைத்தையும் சொன்னோமாகையால், இன்னும் திருப்பி இதனைச் சொல்வதனால் பயன்யாது? எ - று.

(க - ரை.) இந்நூலில் கூறப்பட்ட ஞானம் ஞானசார மென்னும் இரண்டனுள், கூறவேண்டுவன அனைத்தும் அடங்குதலின், இனிக் கூற வேண்டுவதாக ஒன்றுமில்லை யென்பதாம்.

என்னாலே என்றவிடத்து ஏகாரம் அசை. ஞானத்தை என்றவிடத்து அத்து சாரியை; ஐ அசை. இயம்பினது ஆல் என்ற விடத்து ஆலும், ஈற்றிலுள்ள ஏகாரமும் அசை.

தகுவதனைத்து மென்பது ஒருமைப் பன்மை மயக்கம்.

சொன்னால் என் என்றதனால், திரும்ப திரும்பச் சொல்லவேண்டாம்; சொல்லியன கொண்டு அறிந்து கொள்க என்றவாறாயிற்று. (சுகூ)

தேவிகாலோத்தர விருத்தி முற்றிற்று.

---